# காந்தி மகான் சரித்திரம்.

வித்வ சிகாமணி

**K. நட்டார் அவர்களால்**

பாடப்பெற்றது.

**ஹிந்துஸ்தானி மஹால்,**

**தூத்துக்குடி.**

# காந்தி மகான் சரித்திரம்.



வித்வ சிகாமணி
**K. நட்டார் அவர்களால்**
பாடப்பெற்றது.



ஹிந்துஸ்தானி மஹால்,
தூத்துக்குடி.

ரிஜிஸ்டர் காபிரைட்

**1949**

விலை ரூ. **2.**

# முகவுரை.

கலியுக அவதாரமான காந்தியடிகளின் சரித்திரத்தை அநேகர் எழுதியிருக்கிறார்கள். மகாத்மாவும் தம் சுயசரிதையைத் தாமே எழுதித்தந்திருக்கின்றார். இருப்பினும், அவைகளைப் படித்து உரிய சரித்திரத்தைச் சரிவரத் தெரிந்து மகிழ்வோர் ஒரு சிலரே! வித்வ சிகாமணி நட்டார் இயற்றிய இந்நூல் பண்டிதருக்கும், படிப்பில்லா பாமர மக்களுக்கும், சின்னஞ்சிறு பாலர்களுக்கும் காந்திமகான் வாழ்க்கை தெளிவாய் விளங்கும் தன்மையில் அமைந்திருக்கிறது. இதிகாச, புராண. சாஸ்திரங்களை பக்தி ததும்பப் பாடிமகிழும் இசைநடையில் இனிய கவிச் சித்திரமாக மிளிர்கின்றது. நம் பழங்காலப் புலவர்களின் தமிழ் பண்பைப் பின்பற்றி தற்கால நவீன முறையில் திகழுகின்றது. அம்மானை, அகவெற்பா, வர்ணிப்பு போன்ற எந்த இசையிலும், அவரவர்கள் மனம்போல் பாடி ரசிப் பதற்குப் பொருத்தமானது. காந்திமகானின் தூய பழக்க வழக்கங் களையும், அரிய சேவைகளையும் படிப்பவர் மனதில் அப்படியே பதியவைக்கும் தன்மை மிகுந்திருக்கின்றது.

"சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்"

என்பதற்கேற்ப பல அரும்பெரும் செயல்களை இலகுவாகவும், தெளிவாகவும், எளிய இனிய கவி நடையில் விளக்கி நிற்பதால் இஃது எல்லோரும் படிப்பதற்குரியதே! காந்திமகான் வாழ்க்கை வரலாறுகளையும், காங்கிரஸ் மகா சபையின் சீரிய சேவைகளையும், வேறு பல உயரிய சாதனங்களையும் தெறிந்துகொள்வதுடன், தங்கள் வாழ்நாளைச் சீர்படுத்தி, வேண்டுவன பெற்று, நல் வாழ்வு நடத்து வதற்கு ஏற்றவை காண்பதற்கும் இப்புத்தகம் ஏதுவாக இருப்பதால் தமிழ்மக்கள் அனைவரும் வாங்கிப்படித்து உரிய பயனை அடையக் கடமைப்பட்டிருக்கிறார்கள். "**காந்தி மகான் சரித்திரம்**" தமிழர்கள் வீடுதோறும் காட்சியளிக்க எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக!

பதிப்பாளர்,

கோவில்பட்டி, சிறை சென்ற சத்யாக்கிரகி
அன்பன் நிலையம்,
**க. வ. கந்தசாமி செட்டியார் அவர்கள்**
இயற்றியது.

---

1. சத்திய உருவாய்த் தோன்றி
   தரணியில் அஹிம்சை நாட்டி
   நித்திய வாழ்வை ஏற்று
   நிகரில்லா கீர்த்தி மல்கும்!
   உத்தமன் காந்தி வாழ்வின்
   உயர்திரு சரிதம் தன்னை
   எத்திறத்தோறும் காண
   இனிமை யம்மானை யாக

2. விள்ளரும் தேச பக்தி
   விருப்பொடு செய்த நல்லான்?
   தெள்ளிய தமிழில் வல்ல
   செப்பருங் கலைகள் கற்ருேன்!
   பள்ளியின் குரு பீடத்து
   பயிலுவர்க் (ஹி) "கிந்திக்" காசான்
   வெள்ளறம் தந்த மேலோன்!
   வீருடைப் புலவன் நட்டார்!

3. "காசினிவா ழெல்லோரும் காந்திமகா னம்மானை
   ஆசையுடன் பாடி அகமகிழ—நேசமொடு
   பாடி நமக்களித்தான் பாவலன் கே. நட்டார்
   நாடு புகழ்ந்திடவே நன்கு"

4. சத்தியன் காந்தி சரித்திரம் கற்ருேர்
   சித்தம் குளிர்ந்திடும், தீமைகளற்றிடும்
   உத்தமரென்ன உலகினர் போற்றிட
   நித்தியம் வாழ்ந்து நிகரிலை யாவரே!

---

# வாழ்த்துக் கவிதை.

சு. அதிவீரபாண்டியன்
மேலக்கரந்தை



காந்தியின் தூய்மையும் கருணையும் அன்பும்
சாந்த மார்க்கமும் சத்திய நோக்கமும்
மாந்தர் யாவரும் மானிலம் தன்னில்
காந்தி வழியைக் கைக்கொள்வராயின்
மக்கள் திருந்தி மாசற்றோராய்
தக்கநன் நோக்கு தழைத்து இன்றே
நல்வழி நடப்பர், எனினும்நம் காந்தியின்
சொல்வழி தன்னைத் தொடர்பாய் எழுதிட
தமிழில் உண்மையைச் சாற்றிடும் கவிஞர்கள்
அமையவில்லை! அமையவில்லை!!
என்று யாம் இருந்தோம் இறுதியில் இந்த
பொன்னூல் காந்தி மகான் சரித்திரத்தைக்
கண்டோம் இதனில் காந்தியின் எண்ணமும்
பண்பும் சிதறாது எளிய பைந்தமிழில்
புவியோர் விரும்பிப் போற்றிட எழுதினோர்
கவிஞர் நட்டார்க்கு கைம்மாறு தமிழர்கள்
வையமும் வானும் கொடுப்பினும் ஈடா?
உயர்வு நாம் அவர்க்கு ஓதினும் ஈடா?
ஈடாகாது தமிழர்கள் வாழும்
வீடெல்லாம் நட்டார் நூல் விளங்குக, வாழியே!

---

# ஏ. ரா. சு. பேச்சிமுத்து அவர்கள்.

---

1. " உத்தமன் காந்திமகான் உண்மைச் சரித்திரத்தை
எத்தனையோ பேர்கள் எழுதியுள்ளார்—அத்தனையும்
நாட்டுமக்கட் கேற்றார்போல் நட்டார் நவின்றயிந்தப்
பாட்டுநூல் கீடாமோ? பார்!"

2. " கற்றவர்க்கும், மற்றவர்க்கும் காந்திமகான் நல்வாழ்க்கை
முற்றுந் தெரிய மொழிந்திட்டான்—குற்றமற்ற
சொற்சுவையும், மெய்ப்பொருளும் தோன்றக் கவிநடையில்
நற்கவிஞன் நட்டார் நயந்து!"

3. " தேசமக்கள் காங்கிரசில் சேர்ந்துசேவை செய்வதற்கு
ஆசையுடன் சொன்னயிதை யாபேரும்—பாசமுடன்
வாங்கிப் படித்து வரகவி நட்டார்க்கு
ஈங்குதவி செய்வோம் இசைந்து!"

---

# அட்டவணை.

## அன்பர்களுக்கு எமது வேண்டுகோள்.

**ஐயன்மீர்!**

இவ்வுலகில் அவதரித்த மகான்களில் மிக முக்கிய மானவர் நம் **காந்தி மகான்.** அநேக ஆண்டுகளாக இந்திய மக்கள் அந்நியர்களின் ஆதிக்கத்தில் ஆழ்ந்து கிடந்தார்கள். பல வகுப்பினராக, பல மதத்தினராக, பல கொள்கையுடையவராகப் பிரிக்கப்பட்டு பாழ்படுத்தப்பட்டார்கள். வாயில்லாப் புளுக்கள் போன்று வாடி வதங்கினார்கள். துப்பாக்கி, பீரங்கி முதலிய நவீன பயங்கர ஆயுதங்களின் ஆதரவால் நம்மை அடக்கி வந்தார்கள் ஆறுயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வந்த வெள்ளையர்கள். "இவர்கள் பிடியிலிருந்து விடுதலை பெற முடியும்" என எந்த இந்தியரும் எண்ணியதில்லை. அவ்வளவு ஒடுக்கப் பட்டுக் கிடந்தனர் இந்நாட்டினர்.

முளங்கால் முண்டு கட்டிய நம் காந்தி மகான் ஆத்மீக சக்தியினாலும், "அஹிம்சை" என்ற ஆயுதத்தினாலும் அவ்வளவு பெரிய ஆதிக்கத்தை, ஏகாதிபத்தியத்தை அலறியடித்து ஓட வைத்தார். இந்தியா சுதந்திர நாடாகத் துலங்க வைத்தார். கடந்த யுத்தக் கொடுமையினாலும், பருவமழை இன்மையாலும் எங்கும் பெரும் பஞ்சம். அர்த்தமற்ற வகுப்பு வாதத்தால் உண்டான அகதிகளின் தொல்லை. இன்னும் பல காரணமில்லாத இயக்கங்களின் எதிர்ப்பு! இவையனைத்தும் சமாளித்து, தக்க முறையில் மக்களுக்கு வேண்டுவன புரிந்து வருகின்றனர் நமது சுதந்திர ஆட்சியினர். ஒரு குடும்பத்தில் ஏற்படும் குறைகளை நீக்க முடியாது எத்தனையோ ஆண்டுகள் இடைஞ்சல்படுகின்றார்கள். நாற்பது கோடி மக்களும் பல்வேறு தொல்லைகளும் நிரம்பிய பெரிய தேசத்தை, உரிய வழியில் சீக்கிரம்

உயர்வாக ஆண்டு வருவது வியக்கத்தக்கதே! "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்" என்னும் பொய்யாமொழிக்கேற்ப வாயினால் பேசுவார்கள். செயலில் இறங்கினால் தெரியும் சிரமம். நம் சுதந்திர சர்க்கார் வருந் தொல்லைகளைத் தாங்கி, மக்களுக்கு நன்மை செய்துவருவதற்குத் தக்க காரணம் மகாத்மாவின் ஆத்மீக சக்தியே யாகும்.

அவ்வளவு மகிமையுள்ள காந்திமகான் சரித்திரத்தை எல்லோரும் நன்கு தெரிந்து கொள்வது மிக முக்கியம். ஆகையினால், அதைக் கவிநடையில் பாடித்தருமாறு பல அன்பர்கள் கேட்டார்கள். அவர்கள் விருப்பப்படி நம் காந்தி மகான் சரித்திரத்தை எனக்குத்தெரிந்தமட்டும் பாடி முடித்தேன். இதை அநேக ஊர்களில் பலர் கூடியிருந்து படித்துப் பார்த்தார்கள். படிப்பில்லா பாமர மக்களுக்கும் சரித்திரம் கவர்ச்சியாகவும், இலகுவாகவும் விளங்குகிறதென்றும், உடன் அச்சிட்டுத் தருமாறும் வற்புறுத்தினர். பள்ளியில் படித்தறியாது பாக்களியற்றும் யான், விளம்பரத்தினால் பேரோங்கும் இஞ்ஞான்று விளம்பரப்படுத்தப்படாத யான், மகாத்மா காந்தியடிகளின் மகா மகிமையையும், புனிதமான சேவையையும் "மக்கள் அனைவரும் படித்தறிய வேண்டும்" என்ற பேரவாவினால் இஃதை அச்சிட்டு வெளியிடத் துணிந்தேன். இதில் தவறுதல்கள் இருப்பின் பொறுத்து என்னை ஊக்குவிக்குமாறு அனைவரையும் அக மகிழ்வுடன் வேண்டிக் கொள்ளுகின்றேன்.

வித்வசிகாமணி,
K. நட்டார்.

---

# காந்தி மகான் சரித்திரம்.

## வெண்பா.

"அன்பின் உருவாய் அவதரித்த காந்தி மகான்
இன்பச் சரித்திரத்தை எல்லோரும்—பண்புறுகப்
பாடி மகிழப் பரிந்துரைத்தேன் வேண்டுவன
கூடிவர ஆண்டவனைக் கொண்டு."

"வாழ்வு மனம் போல் வருமென்னும் முன்னோர்சொல்
தாழ்வுறு தென்பதற்குச் சான்றாக—ஊழ்வினையை
எண்ணாது, தம்மனம்போல் எண்ணியதில் வெற்றிபெற்ற
புண்ணியவான் காந்தி மகான்."

"ஆண்டுபல அந்நியர்க்குள் அல்லலுற்ற இந்தியர்கள்
மீண்டும் சுதந்திரம்பெற்றோங்கிடவே—வேண்டும்
விதிகொண்டு, பாடுபட்டு, வெற்றிபெற்று நல்ல
கதிபெறச் செய்தமகான் காந்தி"

தோன்றி விளங்கும் தொல்லுலகின் வாழ்வெல்லாம்
ஊன்றி நினைக்கின் ஒன்றுமில்லை—தோன்றும்
மனை மக்கள், நன்மதிப்பு, மண் பொன், பொருட்கள்
அனைத்தும் அழிவதே யாம்."

"இந்த உலகின் இயல்பை உணர்ந்தவர்கள்
'சொந்தம்' என எதையும் சொல்லார்கள்—பந்தம்
மிகுந்தாலும் அஞ்சிமிறளார்; பிறர்க்குத்
தகுந்தாற்போல் கொள்வார் சடம்."

"தக்கார்யாம்!" என்று, தகவிலார் செய்சூழ்ச்சி
எக்காலும் செல்லாது எவ்விடத்தும்—மக்கள்
அறிவும், பலமும், அடைவரேல் அன்றே
தெரியும் அவர்கள் செயல்.!"

"அமபுவியின் வாழ்விற்கு ஆதரவு ஆண்டவனை
நம்பி வருவதாம்! நன்கறிவீர்!—வம்பினர்போல்
வீணாய் மதப்பேய் வெறிகொண்டு வீழ்பவர்க்குத்
தோணாது நன்மைச் சுடர்."

"அன்னை வயிற்றுதித்த அன்றுமுதல் இன்று வரை
என்னை வளர்த்துவரும் ஈசனவன்—இன்னும்
எனக்கிங்கு வேண்டுவன ஈயானோ! என்றும்
மனமகிழ்ச்சி கொள்வேன் மதித்து."

"மாமகிமை பெற்ற மகாத்துமா காந்திமகான்
சீவியத்தை நற்கவியாய்ச் செப்புதற்கு—பூவுலகில்
பல்வேறு பேர்சொல்லிப் பணித்தேற்றும் தெய்வங்கள்
எல்லாந் துணையாம் எனக்கு."



## கடவுள் வணக்கம்.

அண்ட சராசரங்கள் அனைத்திற்கும் ஆதியதாய்
எண்டிசையும் தோன்றுகின்ற எப்பொருட்கும் காரணமாய்
என்றும் இருப்பதுவாய் எல்லா முடையதுவாய்
ஒன்ருய்ப் பலவாய் உரைக்க முடியாததுவாய்
சூரியனும் சந்திரனும் தோன்றுங் கிரகாதிகளும்
சீறுதவருமலென்றும் திகழ்ந்து வருவதற்கும்
மண்ணில் புதைத்த விதை மரஞ்செடிகளாவது போல்
எண்ணிலாக் காட்சியெங்கும் இலங்கி வருவதற்கும்
காற்று, மழை, மின்னல் காயும் வெயிலிருட்டு
தோற்றுகின்ற யாவும் தொடர்ந்து வருவதற்கும்
ஆண், பெண் பிறப்பிறப்பு ஆகுமின்ப துன்பமொடு
காண்ப தனைத்திற்கும் காரணமானதுவாய்
எப்பொழுதும் எவ்விடத்தும் எண்ணியது போலிலங்கும்
ஒப்பிலாச் சக்தி யெனும் ஒன்ரும் பரம்பொருளை
எந்தனுக்கு வேண்டும் இயல்பனைத்தும் தந்துதவச்
சொந்தமுடன் மனதில் துதித்தேன் உறுதிபெற
உடல் நலம் உற்சாகம் உய்வதற்குகந்ததெல்லாம்
திடமாய் எனக்குதவச் சிந்தையிலே கொண்டேன் காண்
சீர்ந்தமிகுங் காந்தி மகான் சரித்திரத்தைக் கூறுதற்கு
வேண்டியதெல்லாம் பெருக விரும்பித்துதித்தேன்யான்



## அவதார மகிமை

அலைகடல் சூழ் இவ்வுலகில் அவதரித்த மேலோரில்
தலைசிறந்து மக்களுக்குத் தாழாதுழைத்த மகான்
அடிமைப் படுகுழியில் அவதியுற்ற இந்தியர்கள்
பெருமைப்பட நல்லரசு பெற்றுயர வைத்தபிரான்
தொப்பி சட்டை துப்பாக்கி தூரவரக் கண்டாலும்
தப்பினோமென்றோடினோர்கள் தைரியம் பெற வைத்தோன்
வெள்ளைவேட்டி கண்டவுடன் வெருண்டோடி போனவர்கள்
உள்ள நிலை கண்டுயர உற்சாக மூட்டி வைத்தோன்
பாடுபடும் மக்களுக்கே பாத்தியதை உண்டென்று
வீடு தோறும் பேசுதற்கு விபரங்கள் காட்டிவிட்டோன்

ஜாதி, மத, பேதமென்னும் சாக்கடையில் வீழ்ந்து மக்கள்
நீதி தவராதிருக்க நேர்மை எடுத்துரைத்தோன்
தன்னுயிர்போல்மன்னுயிரைத்தானெண்ணவேண்டுமென்ற
பொன்னுரையை மக்களுக்குப் போதித்த புண்ணியவான்
அஹிம்சையினுலுண்டாகும் அற்புதசக்திதனின்
மகிமைதனை யுலகோர் மதித்தொழுகக் கூறி வந்தோன்
உலகிலுள்ள மக்களெல்லாம் ஓர் தாயின் பிள்ளைகள் போல்
இலகி வரவேண்டுமென்னும் எண்ணமிகவுடையோன்
எத்தனைதான் கட்சிபல இந்நாட்டில் தோன்றினும்
அத்தனைக்கும் வேண்டியவையமைத்து வைத்தசத்தியவான்
அன்பிற்கணிகலமாய் அஹிம்சைக்கிருப்பிடமாய்
என்பும் பிறர்க்கெனவே இவ்வுலகில் வாழ்ந்த மகான்
அன்னியர்க்குள் ஆண்டு பல அடிமைபட்டு வந்தவர்கள்
தன்மதிப்புக் கொண்டுயரத் தக்கவழி செய்து வைத்தோன்
வந்தேமாதரமென்னும் வலிமை தரும் மந்திரத்தை
நந்தேய மக்களென்றும் நவின்று பலங்காணவைத்தோன்
புளுக்களைப்போலிந் நாட்டில் புளுங்கி வந்த மக்களையும்
எழுப்பி மனிதரென்னும் ஏற்றங்கொண்டு நிற்கவைத்தோன்
ஆங்கிலேயர் ஆதிக்கத்தால் அடங்கி ஒடுங்கி நின்ற
தீங்கறியா இந்தியர்கள் தேர்ச்சி பெறச்செய்துவிட்டோன்
எக்காலும் மக்களுக்கு ஏற்றவைகள் செய்வதற்கு
தக்கபடி காங்கிரசைத் தளராதமைத்து வைத்தோன்
புத்தர், கிறிஸ்துநாதர் போன்றிங்கே மக்களுக்கு
மெத்தவும் பாடுபட்டு மேன்மைபல செய்த மகான்
பிறந்திறக்கும் மக்களிலே பேருபெற்ற மகான்களிலே
சிறந்த சக்தி கொண்டவராம் தெய்வீக காந்தி மகான்
அண்டம் நடு நடுங்க ஆண்டு வந்த வெள்ளையரும்
கண்டவுடன் பணியும் கனிவு கொண்ட காந்தி மகான்

வீட்டினிலே பேசுதற்கு விபரந்தெரியாதவரும்
நாட்டினிலே பேசுதற்கு நல்ல சக்தி தந்த மகான்
இப்பெரிய காந்தி மகான் இனிய சரித்திரத்தை
செப்ப மனந்துணிந்தேன் செகத்திலுள்ளோர் தாமறிய.

---

## கால இயல்பு

நாகரீகமென்று சொல்லி நாணமின்றி வீணை
போகமதில் வீழ்ந்துழலும் பொல்லாத காலமிது
சினிமாக் கலையென்று தெரியாச் சிறுவர்க்கும்
அநியாயம் கற்பிக்கும் அந்தகார காலமிது
நல்லவர் கெட்டவரென்ற ஞாயம் சிறிதுமின்றி
எல்லோரும் ஒன்றென்று இயம்புகின்ற காலமிது
முன்னோர்கள் கண்டிடாத முக்கியங்கள் கண்டதாக
தன்னை மதித்தொழுகும் தருக்குமிக்கோர் காலமிது
விஞ்ஞானம் கண்டோமென்று வீண்பெருமை பேசி எங்கும்
அஞ்ஞானம் மேலோங்க அவதியுறும் காலமிது
உழுது பிழைப்பவர்கள் உடல் மெலிந்து வாடிடவும்
பழுது வருந்தொழில்கள் பார்ப்போர் பருத்திடவும்
ஓயாதுழைப்பவர்கள் ஒன்றுமின்றித் தாழ்ந்திடவும்
வாய் வீச்சுக்காரரெங்கும் வலிமை பெற்று வாழ்ந்திடவும்
பாடு படும் மக்களெல்லாம் பட்டினி கிடந்திடவும்
கேடு செய்யுந் தன்மையுள்ளோர்கெந்தளிப்புகொண்டிடவும்
இன்னும் பலவாறு இடர் செய்வோரோங்கிடவும்
நன்மை புரிபவர்கள் நலிந்து வருங்காலமிது

சிறப்பால் உயர்வு தாழ்வு சேருமென்ற நீதிதனை
பிறப்பாலே சேருமென்று பிறட்டிடுவோர் காலமிது
உள்ளத்தில் கள்ளம் வைத்து உடலைமினுக்கி வரும்
கொள்ளைக்கார மக்களுக்கே கூடிவருங்காலமிது
ஆணவங்கள் பேசி அடுத்தவரை ஏமாற்றி
வீண்வாதம் செய்பவர்க்கு வேண்டிய நற்காலமிது
தெய்வச் செயலென்று செப்பிவந்த நம்பிக்கையை
உய்யும் செயல் நம்மதென்று உரைப்பவர்கள் காலமிது
சக்திமிக்க கல்விதனைச் சற்றுங்கருதாது
உத்தியோகக் கல்விதனை உயர்த்துவருங்காலமிது
கடவுளே இல்லையென்று கண்மூடி மக்களெங்கும்
திடமாகப் பேசுதற்கு தேர்ச்சி தரும் காலமிது
பணக்காரரைத் தொலைக்கப் பாடுபடுகிறோமென்று
பணக்காரர் ஆகி வரும் பண்புடையோர் காலமிது
ஏழைகளை ஈடேற்ற என்று சொல்லி யாவரையும்
ஏழைகளாக்கிவரும் இயல்புள்ளோர் காலமிது
ஆயுதங்கள் ஆகாதென்று அலறிக்கொண்டு பூமியெங்கும்
ஆயுதங்களைப் பெருக்கும் அநியாயக் காலமிது
நடந்த பெரும் யுத்தத்தாலும் நல்லமழையின்மையாலும்
அடைந்த பெரும்பஞ்சத்தையும் அஞ்சாது தாங்கி நின்று
மக்களைப் பாதுகாக்கும் மகிமையுள்ள சர்க்காரைத்
தக்கதல்லவென்றுரைக்கும் தருதலைகள் காலமிது
சுதந்திர சர்க்காரின் தூய நிலை கண்டிடாது
இடைஞ்சல் பல செய்துவரும் ஏற்றமிலார் காலமிது
பண்டு மக்கள் காணாத பல்வேறிலக்கியத்தை
கண்டு விட்டோமென்று சொல்லி கர்வங்கொள்ளுங்காலமிது
கஷ்டமில்லா வழியே கண்ணியமென்றும் மேலென்றும்
இஷ்டம் போல் சொல்லிடுவோர்க்கேற்ற கலிகாலமிது

அசைசீர் தளைமற்றும் யாப்பியல்கள் தப்பாது
இசைசேர் கவிகள் இயற்றுவதிலும் மனம்போல்
வசன நடையில்லெழுதும் வண்மையே மேலென்றும்
விசனமொடு இஃது மூந்நாள் விளங்காது போனதென்றும்
உண்மையுணராது உரைப்போர் அறிஞரென்று
நன்மை புரிந்தவரை நாடி வருங்காலமிது
இப்படிப்பட்ட இயற்கையுள்ள காலத்திலே
செப்பினேன் காந்திமகான் திவ்ய சரித்திரத்தை
எல்லாம் விளம்பரத்தால் ஏற்றமுறுமிந்நாளில்
நல்லார் அறியவென்று நவின்றேன் கவிதையிலே.

---

## அவையடக்கம்.

---

மங்காப் பலவளமும் பல்கியிந்த மாநிலத்தில்
எங்கும் புகழ் பெருகும் எட்டயபுரம் நாடு
கல்விசெல்வமிக்கவரும் கருத்திலுயர்ந்தவரும்
விற்பனரும் வீரர்களும் விளங்கும் இளசைநாடு
குமுரிக் கவி பாடினுல் குவலயம் நடுங்குமென்ற
உமருப் புலவருமே உதித்த திருநாடு
உரிய சுதந்திரத்தை உலகோர்க்குணர்த்தி விட்ட
அரிய கவி பாரதியும் அவதரித்த நன்நாடு
திட்டப்படி வேண்டுவன செய்து புகழோங்கிவரும்
எட்டப்ப பூபதியின் இயற்கைவள நாடதிலே
நல்வளங்களுள்ளதெல்லாம் நன்கு செழித்தோங்க
வெள்ளறம் என்று பெயர் விளங்கும் பதியதிலே

முல்லை நில மக்களென்று மொழியுந்திருமாலின்
தொல்மரபினில் தோன்றி துணிந்து வரகவியாய்
செந்தமிழ், ஹிந்துஸ்தானி, தெலுங்கு, சமஸ்கிருதம்
சொந்தமாகப்பயின்று தொண்டு செயுஞ் சிறியேன்
நட்டாரெனும் பெயரும் நன்கமைந்து காந்திமகான்
திட்டப்படி சேவைசெய்ய சிந்தை மிகுஞ்சிறியேன்
காந்திமகானின் கதையைத் தெரிந்த மட்டும்
மாந்தரெல்லாமறிய மகிழ்ச்சியுடன் பாடுகிறேன்
சீதப் பெருக்கால் சிறந்தோங்கும் தேக்கதின் முன்
ஊதப்பொருக்கால் துளன்றுடும் நாணலுபோல்
வன மூபல்கள் ஓடுதென்று வகையறியா ஆண்மையொன்று
மனமுவந்து ஓடுதற்கு மயங்காது வந்ததுபோல்
கொக்கொக்கோ என்றிரைந்து கூவுகின்ற சேவலின்முன்
திக்கிமுக்கி கூவுகின்ற சின்னவிடைச்சேவலைப்போல்
செந்தமிழின் பாமலிந்த தீங்கவிஞர் பாதார
விந்தமதிலிக் கதையை விளம்புகின்றேன் வெள்ளறிவன்
நூற்பலவுங் கற்றுணர்ந்த நுண்ணறிவோர் தன்னிடத்தே
நான்மறையும் பற்றாத நாயேன் உரைக்கேன் காண்
இக்காலத்திற் கேற்ற எழுத்தாளர் முன்னிலையில்
திக்காது பாடுகின்றேன் செந்தமிழ்ப்பாமாலையாக
புவியிலே எக்காலும் புகழ்பெற்று வந்திடவே
கவியாகப் பாடுகின்றேன் காந்தி மகான் நற்கதையை
பிறர்க்கென வாழ்ந்து வந்த பெரிய மகான் காந்திஜியை
மறக்கா திருப்பதற்கு மனமகிழ்ந்து பாடுகிறேன்
இருப்போர் இனிப்பிறப்போர் எல்லோரும் காந்திமகான்
அரும் பெருஞ்சரித்திரத்தை அறிந்துவரப்பாடுகிறேன்
சுதந்திர சர்க்காரின் சுகமிக்க நல்வழியில்
இதம் பெற மக்களெல்லாம் இசைந்துவரப் பாடுகிறேன்

ஏதேனும் குற்றங்குறை இருந்தால் மனம் பொறுக்க
பாதார விந்தம் பணிந்தேன் பரிவுடனே
காந்தி மகானின் கருணைமிகும் வாழ்க்கைதனை
மாந்தர் படித்துணர மகிழ்ச்சி யளித்திடுவீர்
எல்லோரும் காந்தி மகான் இயம்பிய போதனையின்
நல்வழியைப் பின்பற்ற நவின்றேன் காணம்மானை.
நீர் பிரித்து பாலருந்தும் நேர்மையுள்ள புட்குலம்போல்
தீமைதள்ளி நன்மை கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறேன்
அறிந்து அறியாது ஆன குற்றம் யாதேனும்
தெரிந்தால் மனம்பொருத்து தெளிவு செய்யவேண்டுகிறேன்

---

## நமது இந்தியா தேசம்.

---

உலகிலுள்ள மலையில் உயர்ந்த இமயமலை
தலைச்சிறந்து நேர்வடக்கில் தனித்து விளங்கி நிற்கும்
முக்கோணம் போன்று முழங்கும் கடல் கவிய
தெற்கே குமரிமுனை திகழும் ஒழிதுலங்க
மேற்கும் கிழக்கும்பல் மேன்மை மிகுங் காட்சியொடு
ஆர்க்கும் அலைகடலும் அழகாய் விரிந்திலங்கும்
கங்கை சிந்து பிரம்மபுத்ரா காவேரி நல்யமுனை
துங்கபத்ரா கோதாவரி சுகங்கொடுக்குந் தாம்பிரபரணி
இன்னும்பல்பேர் கொண்ட எண்ணிலா நந்நதிகள்
கன்னி முதல் இமயம் வரை கனிபவளமோங்கி நிற்கும்
இப்பெரிய மாநிலத்தை இயற்கை வள மோங்குமிதை
செப்பிடுவார்கள் இந்து தேசமெனப் புவியில்
நாவலன் தீவென்றும் நற்பாதகண்டமென்றும்
பாவலர்கள் போற்றுகின்ற பாரத நாடென்றும்

பொன் விளையும் பூமியென்றும் பூவுலகிலேசிறந்த
இன்பமிகுந்தோங்கும் இந்தியா வென்றுங்கூற்வார்
பாஷை பதினெட்டும் பலபெயர்கள் சொல்லுகின்ற
தேசம் ஐம்பத்தாறும் சேர்ந்த இந்த தேசத்திலே
புத்தர் அசோகர் புலிகேசி சந்திரகுப்தர்
இத்தகைய மன்னர் பலர் இருந்தாண்ட பூமியிலே
சேர சோழ பாண்டியரும் தெலுங்கரும் சிங்களரும்
வீரமராட்டியரும் மிகுந்தாண்ட நாடிதிலே
சித்தர்களும் யோகிகளும் தேர்ந்த முனீஸ்வரரும்
வித்தை பல கற்றுயர்ந்த வேதத் தபோதனரும்
தத்துவ வேதாந்திகளும் சக்தி மிகு சீலர்களும்
வித்துவத்திலே யுயர்ந்த வேணகவிவாணர்களும்
பண்டை நாள் தொட்டு பாரில் நடக்கும் பல
சண்டைகளிலும் சிறந்த சமத்துள்ள வீரர்களும்
இன்னும் பலதுறையில் ஏற்றமுள்ளோர்களெங்கும்
முன்னம் சிறந்திருந்த மூதாதை நாடிதிலே
மாறு வேடந்தரித்து மக்கள் நிலை நன்கறிந்து
சீருபெற நல்லாட்சி செய்தயிந்தத் தேசத்திலே
மக்களுக்கு வேண்டிய நன்மார்க்கமெல்லா விளக்கும்
தக்க திருக்குறளைத் தந்த இந்த தேசத்திலே
பிரபஞ்சம் என்னும் பெரும்போதை நீங்க வழி
தரும் பகவத் கீதையினைத் தரணிக்குத் தந்ததெய்வம்
கண்ணபிரானுதித்த கண்ணியத்தாலிவ்வுலகில்
புண்ணிய நாடென்று புகழ் பெற்ற தேசமிதில்
வடமேற்குத் திக்கதிலே வளைந்த கடலோரத்திலே
கடல் மூன்று பக்கமுஞ் சூழ் கத்தியவார் நாடதிலே

மக்கள் வாழ்விற்குரிய மாவளங்கள் அத்தனையும்
மிக்கச் செழித்தோங்கும் மேன்மையான கத்தியவார்
கத்தியவாரதிலே கல்விமிக்கோர் வாழுகின்ற
சித்தூராம் போர்பந்தர் சிறந்த பதியதிலே
இதமாக வேண்டியவை இருக்கும் போர்பந்தரென்றும்
சுதாமாபுரியென்றும் சொல்லுகின்ற ஊரதிலே
கள்ளமன வெள்ளையரின் கபடமிக்க ஆட்சியிலே
உள்ளதறியாது மக்கள் ஒடுங்கி வரும் காலத்திலே
வாயில்லாப்புளுக்களைப்போல் வாடி வதங்கி மக்கள்
தாயில்லாப் பிள்ளைகளாய்த் தவித்துநிற்கும் நாளையிலே.

---

## காந்தி மகான் பிறப்பு.

ஆயிரத்துஎண்ணூற்று அறுபத்து ஒன்பதிலே
மாபெரிய அக்டோபர் மாதம் தெய்தி ரெண்டினிலே
காபா காந்தியென்னும் கனவான்க்கும் புத்லிபாய்
தேவியர்க்கும் புத்திரனைப் ஜெனித்தாரே காந்திமகான்
ஆணிரண்டு பெண்மூன்று ஆகும் உடன்பிறந்தோர்
காணும் அறுவர்களில் கடைப்பிள்ளை காந்தி மகான்
மோகனதாஸ் கரம்சந்த் காந்தியென்று கூறுவதே
வாகாயிவருக்கு வாய்த்த முழுப்பெயராம்
காந்தியென்பது குடும்பக் காரணப்பெயராகும்
மாந்தரெல்லாம் இட்டதுவே மகாத்மாவென்றபெயர்

ராமபக்தியில் சிறந்த நல்லயிவர் தாயாரால்
தாமும்ராம பக்தியிலே தாழாது நின்றிடுவார்
தினந்தோறும் விஷ்ணுகோவில் செல்லாதிவர் தாயார்
உணவு சிறிதேனும் உகந்தருந்தமாட்டாராம்
காலையிலே சூரியனைக்கண்டு தரிசிக்காமல்
சீலமொடுபோஜனமும் செய்திடவும் மாட்டாராம்
மழைகாலமானாலும் மறைந்து செல்லும் சூரியனைக்
களங்கமின்றிக் காணாது கனிந்துணவு கொள்ளாராம்
இப்படிப்பக்தியுள்ள இன்னும் சிலகொள்கைகளை
எப்பொழுதும் புத்லிபாய் இயற்கையாகக்கொண்டிடுவார்
தாயைப்போல் பிள்ளையெனுந் தன்மைதனக்கேற்ப
தூயமனக் காந்திஜியும் துணிந்திடுவார்பக்தியிலே
சின்னப்பிராயத்திலே ஸ்ரீராமபக்தியினை
வின்னப்படாது என்றும் விடாப்பிடியாய்க்கொண்டிடுவார்
கடவுளை எண்ணி வந்தால் காணும் பயமெல்லாம்
திடமாய் விலகுமென சிந்தையிலே கொண்டிடுவார்
கண்டதையும் கேட்டதையும் கருத்தில் வைத்து நல்லதென
கொண்டதனை எவ்விடத்தும் கூசாது கூறிடுவார்
வயது பன்னிரெண்டினிலே வழங்கும் குஜராத்தி கற்று
அயராது மேல்படிப்பாம் ஆங்கிலத்தை கற்று வந்தார்
பாழான கொள்கைப் படிபதிமூன்றும் வயதில்
மீளாத் திருமணத்தை மேன்மையெனச் செய்து வைத்தார்
விஸ்தாரமாய்க் கற்கும் வேளையிலே பெற்றோர்கள்
கஸ்தூரிபாயென் னும்கன்னிகையைக்கட்டி வைத்தார்
போதந்தனங் கல்வி போன்று வருங்காலம்
மாதர்மேல் வைக்கும் மனமென்று சொன்ன சொல்லை

பொய்ப்பிக்க காந்திமனம் புரளாதிருக்கவதை
பெய்ப்பிக்கப் பெற்றோர்கள் மீறிமணம் செய்துவிட்டார்
கல்யாணஞ் செய்துகொண்டு கல்வி கற்கும் நாளையிலே
சல்லிச் சிநேகிதரின் சகவாசம் வந்ததுவே
நல்லகுடியில் பிறந்து நல்வளர்ச்சி கொள்ளையிலே
பொல்லாத நண்பர்களின் பொய்ப்பழக்கம் வந்ததுவே.

---

## சகவாச தோஷம்.

---

மாமிசம் தின்னுமகிமையுள்ள வைஷ்ணவத்தில்
தாமுதித்தும் கெட்டவர்கள் சகவாச தோசத்தினால்
பன்றியொடு சேர்ந்த கன்றும் பரிந்து மலமுண்ணும்
என்று பெரியோருரைத்த இனியமொழிக்கேற்ப
ஊன்தின்னும்மக்கள் உடன் பழகி வந்ததினால்
தானும் புலாலுண்ணத் தைரியங்கொண்டனரே
மாமிசம் தின்பதினால் மனதுதிடமாவதுடன்
தாமதமில்லாது சரீரபுஷ்டி உண்டாகும்
என்றுசில கெட்டநண்பர்எடுத்துரைக்க காந்திஜியும்
"நன்று நன்று!" என்று சிலநாட்புலாலும் உண்டுவந்தார்
தாய்தந்தை உற்றார்கள் சற்றும் அறியாது
மாயப்புலாலுணவை மறைவாக உண்டுவந்தார்
தனியே புலால் புசிக்கும் தன்மையினால் வீட்டினிலே
இனிய உணவருந்த இயலாதிருந்திடுவார்
அன்னையதுவறிந்து அப்பா! சிறிதுணவும்
தின்னமுடியாதுதிணறுவதுஎன்னவென்றால்

உடம்புக்கு என்னமோதான் ஒத்துக்கொள்ளவில்லையென்று
திடமாகச் சொல்லிவிட்டு சென்றுவிடுவார்வெளியே
என்றேனும் ஓர் நாள் இறக்குமுடலுக்காக
கொன்றுபுலால் தின்னுப் கொள்ளைசமிக போசபாரும்
அருசுவையோடு புசிக்க அநேக பொருள் தானிருக்க
பிறஉயிரைக் கொன்றுதின்னல் பெரும்பாவமாகுமன்றோ
அர்பச்சிநேகிதரின் அசட்டுப்பழக்கத்திலுல்
சொற்பநாள் மாமிசத்தை தொடர்ந்து தின்றுவந்தனரே
துஷ்டர் சகவாசத்தினுல் சுருட்டும் குடித்ததுண்டு
இஷ்டப்படி இவ்வாறு இழிசெயலில் சிக்கிடவே
வீணுய்ச் செலவுசெய்ய வேண்டும் பணமெல்லாம்
காணுமல் வீட்டினிலே களவு செய்து கொண்டிடுவார்
பங்கப்படவொருநாள் பதராது தம் வீட்டில்
தங்கநகைகூடத் தனித்துத்திருடிஞராம்.

---

## மனந்திரும்புதல்.

---

இப்படிச் செய்துவந்த இழிசெயல்கள் அத்தனையும்
தப்பிதம் ஆகுமென்று தாமே தெரிந்தார் பின்
அற்பர் சிநேகிதத்திலுல் அறியாது செய்துவந்த
துர்ப்பழக்கமத்தனையும் துலைக்க மனங்கொண்டாரே
பொய்யும் களவும் புலாலுண்ணும் புல்லறிவும்
ஐயோ நமக்கு அடுக்காப்பெரும்பழியே
எப்படியோ இச்செயலில் ஈடுபட்டோம் என்றுமினி
இப்பழியில் சிக்கிடாது இருக்கவழி தேடவேண்டும்
என்றுமனதிலெண்ணி இயற்றி வந்த தீமையெல்லாம்
ஒன்றும் ஒளியாமல் உரைத்தாரே தந்தையிடம்

அப்பாவே! யானும் அற்பர் சகவாசத்தினல்
ஒப்பாத செய்கைபல உணராது செய்துவிட்டேன்
மாமிசம் தின்றேன் மறைந்து களவு செய்தேன்
காமியரால் பொய்யும் கபடமும் கற்றுவிட்டேன்
என்னையறியாமல் இழைத்து வந்த தீச்செயல்கள்
தன்னை நினைக்கமனம் சகிக்கவில்லை என்ன செய்வேன்
என்று சொல்லத்தந்தையரும் ஏதுசொல்வாரப்போது
ஒன்றுக்கும் அஞ்சாதே உண்மையுள்ள என் மகனே
செய்த குற்றம் அத்தனையும் தெரிந்து உணருவதே
உய்யும் வழிதெரிய உறுதியளிக்குமப்பா!
ஆகையினுல் இன்றுமுதல் அற்பர் சகவாசம்விட்டு
நீயும் உயர்ந்தவனுய் நேர்மையொடு நடப்பாய்
உண்மை உணர்ந்ததினுல் உத்தமனே நீயினிமேல்
நன்மை கடைப்பிடித்து நானிலத்தில் பேரெடுப்பாய்
என்றுரைக்க காந்திமகான் இன்பமுடன்கேட்டுமேதான்
அன்றுமுதல் நல்வழியில் அமைந்தொழுக ஆரம்பித்தார்
கல்வி கற்கும் நேரமன்றி காலியுள்ள நேரமெல்லாம்
நல்லவர்களோடு சேர்ந்து ஞாயம் தெரிந்து வந்தார்.

---

## இங்கிலாந்து செல்லுதல்.

வயதுபதினுறு வந்தபோது தந்தையுமே
உயிர்நீக்க காந்திமகான் உளங்குழைந்து வாடினுரே
பத்தாம் வகுப்பிலிவர் பாசுபண்ணும்போதினிலே
உற்றவயதுபதி னெட்டாகி விட்டதுவாம்
அண்ணனுட பாதுகாப்பில் அன்றிருந்த காந்திமகான்
எண்ணினுர் டாக்டர்வேலைஏற்றதெனவேபடிக்க
பாரிஸ்டர் வேலை பார்ப்பதுவே இவ்வுலகில்

சாலச்சிறந்ததெனத் தமையனரும் தானினைந்தார்
கட்டாயம் இங்கிலாந்து காந்தியும் போயங்கே
சட்டம் படித்துவரத் தமையனரும் எண்ணினதால்
அண்ணன் கருதியவார் ஐரோப்பா சென்றங்கே
கண்ணியமாய்ச் சட்டம்கற்க காந்தியும் ஆசைகொண்டார்
புத்லிபாய் அம்மையாரும் புத்திரன் சீமைசெல்ல
சற்றும்பிடிக்காமல் சஞ்சலப்பட்டாரே
மதுபானம் செய்திடுல் மாமிசங்கள் தின்றிடுதல்
பிறமாதரிச்சை கொள்ளல் பெருத்ததென்பார் சீமையிலே
துஷ்டப் பழக்கமிக்க தூரதேசம் இங்கிலாந்து
இஷ்டப்படி நீபோக எனக்குப்பிடிக்கவில்லை
பொல்லார் சகவாசம் போக்கினல் உன் நிலைமை
எல்லாம் பலவிதமாய் ஏற்படலாம் என் மகனே!
என்றுரைத்த தாயாருக்கு எடுத்துரைப்பார் காந்திமகான்
ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் உறுதிதளரேனம்மா
மாமிசங்கள் தின்பதில்லை மதுபானம் கொள்வதில்லை
காமியஞ்சேர் மாதர் தம்மை கருத்திலும்வைப்பதில்லை
எந்தவிதமான இடரிலும் என்மனதை
பந்தப்படுத்திடாது படித்துவாரேனம்மா
சத்தியமாய்ச்சொல்லுகிறேன் தாயேவிடைகொடுப்பாய்
புத்தியுடன் இங்கிலாந்து போய்ப்படித்துவருவேனம்மா
என்றுரைக்க அம்மையாரும் இரங்கிமனமகிழ்ந்து
நன்று நன்று என் மகனே நற்பதவி பெற்றிடுவாய்
பூவுலகில் மேலான புகழ்ச்சிபெற்றுவாழ்வதற்கு
ஆவலொடுசீமைசென்று அலுவல் கற்று வந்திடுவாய்
என்று பல வாழ்த்தி இனிது விடைகொடுக்க
சென்ருர் காந்திமகான் சீமைக்குப் பிரயாணமானர்
தண்ணி தாண்டிச் சீமைசெல்லல் ஜாதிக்கு ஆகாதென்று
கண்யமுள்ள சுற்றத்தாரும் கட்டுப்பாடுசெய்தனரே

வைஷ்ணவப் பனியாக்கள் வமிசத்திலே பிறந்தோர்
இஷ்டம்போல்சீமைசெல்லல்ஏற்காதென சண்டைசெய்தார்
சாதியிலே தள்ளிவைத்து தண்டனையும் மேலும்விதித்து
நீதியின்றிப் பல்வேறு நிஷ்டூரம்செய்தார்கள்
இந்தவிதம்காந்திமகான் இனியகுடும்பத்தாரை
தொந்தரவு செய்தனரே சொந்தஜாதிக்காரருமே
அன்றவர்கள் செய்ததெல்லாம் அகத்தினிலே கொள்ளாது
சென்றாரே காந்திமகான் சீமைக்கு கப்பலிலே
கப்பலிலே மேனாட்டார் கழரிவந்த ஆங்கிலமும்
அப்பொழுது காந்திஜீக்கு அதிகந்தெரியாததாலும்
கூசாதெவருடனும் கூடுங்குணமின்மையாலும்
பேசாது தம்மறையில் பிரிந்திருந்தார் கப்பலிலே
இறைச்சி கலவாவுணவே எந்தனக்குத்தேவையென்று
உணவளிக்கும் சிப்பந்திபால் உகந்துபெற்று உண்டுவந்தார்
கப்பலில் உள்ள சிலர் காந்திஜீ கருத்தறிந்து
எப்படி இறைச்சியின்றி இங்கிலாந்தில் வாழ்வீரென்றார்!
மாமிசமில்லா உணவு மருந்திற்கும் கிட்டாத
பூமியிலே எப்படிநாள் போக்கிவருவீரென்றார்!
இப்படிபலர் கேட்க எல்லாம் மனதில் வைத்து
செப்பரிய இங்கிலாந்து தேசம்வந்து சேர்ந்தாரே
தாய்நாடு தன்னைவிட்டு சமுத்திரமெல்லாங் கடந்து
தூயமனக் காந்திமகான் துணிந்துவந்து சேர்ந்தாரே

## காந்தி மகான் இங்கிலாந்தில் வாழ்ந்தது.

இங்கிலாந்து வந்ததுமங் கிருந்த ஒரு ஹோட்டலிலே
தங்கிவந்தார் அந்நாட்டின் தன்மை தெரியாதவராய்
உணவு பிடிக்காததாலும் ஊரைப்பிரிந்துவந்த

நினைவு கனவானதாலும் நீங்காக் கவலை கொண்டார்
மக்கள் நடையுடையும் மற்றுமுள்ள பாவனையும்
மிக்க விபரீதமாய் மென்மேலும் தோன்றினவே
எல்லாம் புதிதாக இருக்குமிந்த நாட்டினிலே
செல்லாது வாழ்க்கையெனச்சிந்தை கலங்கினரே
வாழ்வு மனம்போல் வருமென்றும் முன்னோர்சொல்
தாழ்வு படாதென்பதற்குச் சான்று கொடுத்தாற்போல்
அண்ணல் மனதிற்கேற்ப ஆங்கிலேயர் ஆங்கொருவர்
நண்பராகி வேண்டுவன நல்கி வரப்பெற்றனரே
ஆதரவாயன்றமைந்த அரிய நண்பர் வீட்டிலொரு
மாதம்வரை காந்திஜீயும் மகிழ்ச்சியொடு தங்கினரே
தேசஒழுங்கினையும் தெரியவேண்டுமத்தனையும்
பாசமொடு காந்திஜிக்கு பழக்கிவந்தார் நண்பருமே
இங்கிலாந்து சென்றிருந்த இந்தியரும் அந்நாளில்
தங்களுக்கும் ஆங்கிலேயர் தன்மதிப்பு உண்டென்று
கால்சட்டை மேல்சட்டை கனந்த பூட்சுதொப்பியொடு
மேலும்பல கொண்டிடுவார் வேண்டும் பணம்காலிசெய்து
நம்நாட்டு ஆசாரம் நாகரீக மில்லையென்று
தம்மனதில் எண்ணியவர் சட்டைதொப்பி போட்டனரே
காந்தியும் இம்முறையைக் கைக்கொண்டுமே சிலநாள்
சாந்தமிகுந்துரைபோல் டாம்பீகம்கொண்டிடுவார்
நாட்கள் பல செல்ல நாகரீகமானவந்த
வாழ்க்கைதனை வெறுத்து வழக்கம்போலானரே
கஷ்டப்பட்டுத் தமையன் காசனுப்ப நாமதனை
இஷ்டப்படி துலைத்தல் ஏற்றதல்லவென்றுணர்ந்தார்
படிக்க வந்த நாமுமிங்கு பாழான டாம்பீகம்
பிடிக்க மனம் கொள்ளுவது பிசகாகுமென்றுணர்ந்தார்
இவ்வாறு தானினைந்து எளிய வாழ்வில் ஈடுபட்டு
செவ்வையுடனேபடித்து சிறந்துவரும்நாளினிலே

இறைச்சிகல வாவுணவின் ஏற்றம் விளங்குகின்ற
அறச்செயல் புத்தகமொன்று அகப்பட்டதுவாம் படிக்க
அப்பெரிய புத்தகத்தில் அறியாது மக்கள் செய்யும்
தப்பிதங்கள் அத்தனையும் சரியாய்த் தெரிந்ததினுல்
தேநீரும் காப்பியும் திரேகத்திற்கு தீமை செய்யும்
பானமென அன்றிருந்து பருகாது நீக்கிவிட்டார்
பழங்களையும் காய்களையும் பால் தயிர் மோர் நெய்யினையும்
களங்கமின்றி வேண்டுமட்டும்களிப்புடனேசேர்த்துவந்தார்
மூளைக்கு கல்விகற்றல் முக்கிய மானதுபோல்
மேனுக்கு வேலைசெய்தல் மிகவும் நலமாகுமென்று
தனக்கு வேண்டும் நல்லுணவைத் தாமே சமையல் செய்து
மனக்கவலையில்லாது மகிழ்ச்சியுடன் உண்டு வந்தார்
இவ்வழியில் காந்திமகான் ஈடுபட்ட நாள்முதலாய்
செவ்வைமிகுந்ததுடன் செலவும் குறைந்ததுவே.
இப்படிச் செய்ததினுல் இன்பம் மிகுந்ததொடு
செப்பரிய வீண்செலவும் செல்லாதொழிந்தனவே
படித்தல் சமைத்தல்போக பாக்கியுள்ள நேரங்களில்
அடுத்தமத நூல்களை நன்கராய்ச்சி செய்திடுவார்
எந்த மதத்தினையும் இகழாது இவ்வுலகம்
பந்தம் களைந்திடுதல் பரமபக்தி என்றிடுவார்
குதிரைப்படை பீரங்கிப்படை கொடியதுப்பாக்கிபடை
அதிரப் பிரசங்கித்த அண்ணல் அந்தநாளிலே
புதிதாய்ப்பிரசங்கம் புரிய வந்த மேடையிலே
பதரிவொன்றும் பேசாது பதுங்கி வெளியேறினூராம்
இளமையிலே கூச்சம் பயம் இவர்க்கதிக மானதினுல்
வளமையுடன் எவ்விடத்தும் வாயதிகம் பேசமாட்டார்
இயன்றவரைப் பேசாது இருக்கப்பழகிவந்தால்
பயனதிக முண்டுமெனப்பண்பாய் யறிந்ததினுல்

பின்நாளில் வாரமோர்நாள் பேசா விரதமதை
நன்நயமாயிருந்த நாளெல்லாம் கொண்டிருந்தார்
எல்லாம் தெரிந்தவர்போல் ஏதுந்தெரியாதவரும்
உல்லாசமாய் நடிக்கும் உணர்ச்சியுள்ள சீமையிலே
இல்லாதெழியவர்போல் ஏதுந்தெரியாதவர்போல்
எல்லாம் மனதில் வைத்து இங்கிலாந்தில் வாழ்ந்தனரே
பண்புசிறந்திடவும் படிப்பு மிகுந்திடவும்
அன்புசெறிந்திடவும் அன்றங்கு வாழ்ந்தனரே
ஆயிரத்து எண்ணூற்று தொன்னூற்றுஒன்றதிலே
பாரிஸ்டர் பரீட்சையிலே பாசு பண்ணித் தேர்ச்சிபெற்ருர்
நான்குவருடமந்த நாட்டிலே வாழ்ந்திருந்து
பாங்குபலதெரிந்து பயிற்சி மிகப்பெற்ருரே
கள்ளமில்லாக் காந்திமகான் கல்விகற்றதொடு மந்த
வெள்ளையர்கள் நாட்டிலுள்ள விபரங்களுமே தெரிந்தார்
பேதமில்லாக் காந்திமகான் பிரிட்டிசு நாட்டிலுள்ள
சாதனங்கள் அத்தனையும் சரியாய்த்தெரிந்துவந்தார்
மக்களை மக்கள் மடக்கி யரசாளுகின்ற
பக்குவத்தை நன்கறிந்து பதித்துவந்தார் தம்மனதில்

---

## இங்கிலாந்தில் படித்து இந்தியா வந்தது.

புாரிஸ்டர் பரீட்சை பாசுபண்ணிக் காந்திமகான்
நேரிலிந்த நாட்டினுக்கு நேசமுடன் வந்துசேர்ந்தார்
இங்கிலாந்திலே படித்து எல்லாமிகத் தெரிந்து
புங்கமில்லாத் தாய்நாடு பரிந்துவந்து சேர்ந்தாரே

அலைகடல் மேலோடிவரும் அழகுமிக்க கப்பலிலே
திடமுடனே வந்துசேர்ந்தார் திங்கறியாத்தாய்நாடு
அன்பு ததும்பிடவே அண்ணர் தமையனாரும்
பம்பாய்த் துறைமுகத்தில் பரிந்து வரவேற்றனரே
கப்பல் விட்டுக்கீழிறங்கி கரைவந்ததும் முதலில்
செப்பரிய மாதாவின் சேமமதை கேட்டிடவே
நல்லநம் தாயிறந்து நாட்கள்பல வாயிற்றென்று
சொல்லத் தமையனாரும் துடிதுடித்தார் காந்திஜியும்
அன்பா எனைவளர்த்த அன்னை இறந்த செய்தி
முன்பே எனக்கனுப்ப முடியாமல் போனதென்ன?
பாசமிகும் என் தாயார் பரமனடி கிட்டியதை
ஆசையொடு அன்றெனக்கே அறிவிக்கலாகாதோ!
என்னைப்பிறப்பித்து இவ்வுலகில் வாழவிட்ட
அன்னை தனையினிமேல் யான்காணப் போறேனோ
என்றயர்ந்த காந்திஜிக்கு எடுத்துரைப்பார் அண்ணனாரும்
அன்றுனக்கு அன்னைசெய்தி அறிவித்தோமானக்கால்
தூரதேசத்திருந்து சுருக்காக நீயுமிங்கே
சேரமுடியாது சிந்தை கலங்கிடுவாய்
படிப்பதுவும் கெட்டுவிடும் பரீட்சை பெயிலாகிவிடும்
நொடிப்பொழுதும் இன்பமின்றி நொந்துமனம்வாட நேரும்
ஆகையினால் நாமதனை அறிவிக்கவில்லையென்று
சோகமுறுங் காந்திஜியின் துயர்நீங்கச் செய்தனரே
அன்னை தனை நினைத்து அண்ணல் மகாத்துமாவும்
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி மனந் தேறிவந்தார்.

---



சீமையில் ஆங்கில உடையில் மகாத்மா.



சமைத்தலும், படித்தலும்

## உத்தியோகம் செய்தல்.

காந்திஜியும் ஊர்க்குவந்து காலம்சிறிதானதுமே
பாந்தமுள்ள உத்தியோகம் பார்க்க மனங்கொண்டாரே
வக்கீல் தொழில் நடத்த வாய்த்தவிடம் பம்பாயென
சிக்கனமாயங்கு சென்று செய்து வந்தார் உத்தியோகம்
வக்கீல் பலருக்குமுன் வழக்கைத் திறமையுடன்
வெட்கமின்றி வாதாடி வெற்றிகொள்ளும் வேலையது
கூச்சமின்றி எதையும் கொண்டபடி உண்மையென
பேச்சுத்திறமையினல் பெரிதாக்கும் வேலையது
பொய்யை மெய்யாக்குவதும் பொருளினுக்குத்தக்கவாறு
மெய்யைப் பொய்யாக்குவதும் மிகுந்ததந்தவேலையிலே
கள்ளங்கபடமற்ற காந்திஜியின் நந்நிலைமை
உள்ளபடி சிறிதும் ஒவ்வாதுபோனதினல்
முதலிலொரு பெண்வழக்கை முடிக்க முப்பது வாங்கி
பதறி வழக்காடாது பணத்தைத்திருப்பிவிட்டார்
கோர்ட்டினிலே பேசுதற்கு கோழைமனம்கொண்டதினல்
கேட்டும் பிழைப்பதற்கு கேசொன்றும் கிட்டவில்லை
தம்மால்வரும்வரவு டாம்பீகமானயிந்த
பம்பாயில் வாழ்வதற்கு பற்றுதென உணர்ந்து
அங்கிருந்து ராஜகோட்டை ஆனந்தமாய்ச்சென்று
தங்கிவந்தார் வேண்டுவோர்க்கு தக்கமனுவெழுதி
மனுக்களும் விண்ணப்பமும் மற்றும்பலபத்திரமும்
நுணுக்கமுடனேயெழுதி நூதனமாய் பெயருபெற்றார்
விண்ணப்பம் எழுதுவதில் வெகுசமர்த்தர் என்றெவரும்
எண்ணப்பலபிரிவாய் எழுதிப்பெயர்பெற்றனரே

மனுக்கள் எழுதுவதில் மாதம் ரூபாய் மூந்நூறு
வருத்தமில்லாதுவர வாழ்ந்திருந்தார் ராஜ்கோட்டில்

---

## தென் ஆப்பிரிக்கா சென்றது.

---

ராஜகோட்டை தன்னிலன்று நன்ருய் நடந்துவந்த
தாதா அப்துல் கம்பெனிக்கு தரவேண்டும்பாக்கிக்காக
தென்னுப்பிரிக்காவில் சிறந்த டர்பன்மாநகரில்
நன்னயஞ்சேர்நீதிக்கோர்ட்டில் நடந்துவந்த கேசினுக்கு
வக்கீலா காந்திஜியை வரவேண்டுமென்றழைக்க
மிக்கமனமகிழ்ந்து பேன்மையெனச் சம்மதித்து
ஆயிரத்துஎண்ணூற்றுதொண்ணூற்றுமூன்றதிலே
மாபெரிய ஆப்பிரிக்கா மகிமையொடு சென்றனரே
வெள்ளையர்கள் ஆளுகைக்குள் விளங்கிவந்த அந்நாட்டில்
பிள்ளைகுட்டியோடுவன்று பிழைக்கவந்தஇந்தியரும்
வியாபாரம் செய்வதற்கு விருப்பி வந்த இந்தியரும்
தாமதித்து வாழ்ந்துவந்தார் தாய்நாட்டையும் மறந்து
வெள்ளையர் கருப்பரென்ற வேறுபாடு அந்நாட்டில்
உள்ளதினுல் இந்தியரை ஒடுக்கி இழிவாக்கிவந்தார்
டர்பன்நகர் நீதிக்கோர்ட்டில் தலைப்பாகையோடு சென்ற
விற்பனராம் காந்திஜியை வீற்றிருந்த கோர்ட்டாரும்
எடுத்துவிடும் தலைப்பாகை என்றுத்திரவிடவே
கருத்தறியாக் காந்திஜியும் காரணம் என்னவென்ருர்
எந்தன் தலைப்பாகை எடுப்பதற்கு இவ்விடத்தில்
வந்த அவசியத்தின் வகையென்ன சொல்லுமென்ருர்

எப்படியுந் தலைப்பா எடுக்கமுடியாதென்று
செப்பிவிட்டு கோர்ட்டைவிட்டுசென்றுவிட்டார் வெளியே
இந்தவிபாமதை ஏற்றமுள்ள பேப்பரெல்லாம்
விந்தை மிகுந்திடவே விளம்பரம் செய்ததினால்
சாந்தமிகுங்காந்திமகான் தன்பெயர்தென்னாப்பிரிக்கா
மாந்தரெல்லாமறிய மகிமைபெற்றுவோங்கினவே.

## காந்தி மகான் சில கஷ்டபட்டு ஆப்பிரிக்க இந்தியரின் அவஸ்தை அறிவது.

வெள்ளையரால் இந்தியர்க்கு விளையும் பலதொல்லைகளை
உள்ளபடி சிறிதும் உணர்ந்தறியாக் காந்திமகான்
இன்னொருநாள் பிக்டோரியா என்னுமூர்க்கு ரயிலில்
மின்னும் முதல் வகுப்பு மீதமர்ந்து சென்றிடவே
கண்டவொரு வெள்ளைக்காரன் கடுகடுத்து யாரடாநீ
இந்தியனும் முதல்வகுப்பில் ஏறவென்ன ஞாயமுண்டு
என்றுமே அங்கிருந்த ரயில்வே அதிகாரியிடம்
சென்றிவனைக் கீழிறங்கச் செய்யுமெனக்கூறிடவே
அந்த அதிகாரி அப்படியே காந்தியிடம்
"வந்துவிடும்வேறு வண்டிக்கு" யென்று சொல்ல
"நானும் முதல் வகுப்புக்கான ஒரு டிக்கட்டை
தானே யெடுத்திருப்பதாலிறங்க மாட்டே" னென்றார்
உடனே ஒரு போலிசிடம் உரைக்க அவன் ஓடிவந்து
திடமாகக்காந்திஜியை திட்டிவெளியேற்றினனே
மூட்டை முடிச்சுகளை மோதிக்கீழே தள்ளிடவும்
ஓட்டமெடுத்து ரயில் ஓடினதே அங்கிருந்து
ரயிலு முந்தி விட்டதினால் நல்ல நடுராத்திரியில்
அயர்ந்துறக்கமில்லாது அவதிப்பட்டார் காந்திஜியும்

அன்று இரவெல்லாம் அரியபெரும்பனியில்
நின்று தென் ஆப்பிரிக்கா நிலைமையெல்லாமுணர்ந்தார்
இந்தியர்க்கும் வெள்ளையர்க்கும் இருக்கும் உயர்வு தாழ்வை
அன்றங்கவதிப்பட்டு அறிந்தாரே காந்திமகான்
கோச்சுவண்டி தன்னிலோர் நாள் குந்தியிவர் போகையிலே
பேச்சுடனோர் வெள்ளையனும் பின்னதிலே ஏறிடவும்
அவனுக்கிடம் காணாததால் அமர்ந்திருந்த காந்திஜியை
இறங்கியே கீழ்ப்படியில் இருவென்றான் கோச்சுக்காரன்
அந்த மொழிகேட்டு அதிசயித்துக்காந்திமகான்
"இந்த அநியாயம் எவ்விடத்தும் கண்டதில்லை
பின்னாலே வந்தவர்க்காய் பேதமாயிங்குள்ளோரில்
என்னைமட்டும் கீழிறங்க இயம்புவது நியாயமாமோ?
நானும் அவர்களைப்போல் நல்லகாசு தான்கொடுத்தேன்
ஏனோ எனைமட்டிலும் இறங்கியுட்காருவென்றாய்?"
என்று நலமாயுரைக்க இரக்கமில்லா வண்டிக்காரன்
அன்று அவர்கன்னத்திலே அடித்தான் மனந்துணிந்து
கூடயிருந்தவர்கள் கோச்சுக்காரனை விலக்கி
"போடா சிறுபயலே பொல்லாப்பும் செய்துவிட்டு
அடிப்பதுவும் ஞாயமா?" வென்றதட்டி அகற்றிடவே
தடிப்பயலின் கையை விட்டு தப்பினாரே காந்திஜியும்
வண்டிக்காரன் மீது வழக்குந்துடராது
கொண்டார் மனதில்ந்தக் கொடுமைகள் அத்தனையும்
நிறத்திமிரால் இந்நாட்டில் நிகழுமிந்தச் செய்கைகளை
அறுத்தெரியவேண்டுமென அன்றுமுதலெண்ணி வந்தார்
வெள்ளாமை செய்வதற்கு விபரம் தெரிந்தவர்கள்
தென்னாப்பிரிக்காவில் சிறிதுமில்லாததினால்
இந்தியநாட்டிலுள்ள ஏழை விவசாயிகளை
வந்துமே வெள்ளையரும் வசதிபலசெய்வதாக



நடு இரவில் ரயிலை விட்டுத் திண்டாடுதல்.



கோர்ட்டில் மகாத்மாவைத் தலைப்பாகை எடுக்குமாறு கூறுதல்.

ஒப்பந்தங்கள் பேசி உடனழைத்துச் சென்றங்கே
தப்பிதங்கள் செய்தவரை சங்கடப்படுத்தினரே
ஆண்டுவந்தவெள்ளைசர்க்கார் அதைச்சிறிதும் எண்ணாததால்
யாண்டும்பல துன்பங்கள் ஆனதுவே இந்தியர்க்கு
ட்ரான்ஸ்வால் என்றவிடம் செல்லுங்கருப்பரெல்லாம்
தலைவரி மூன்றுபவுண் தரவேண்டும்சட்டமிதாம்
எந்த ஒரு இந்தியனும் இருக்கும் நிலமதனை
சொந்தமாக வைத்துத் தொழில் செய்யக்கூடாதாம்
பொதுப்பாதை ரோடுகளில் போவதும் குற்றமாகும்
இரவிலனுமதியின்றி ஏகலாகாதாம் வெளியே
அங்கொருநாள் காந்திஜியும் இரவு மணி ஒன்பதுக்கு
பங்கமில்லாது வரப் பார்த்தவொரு போலிசும்
அடித்துப்பிடித்திழுத்து அடாத செயல் செய்திடவே
துடித்தார் இவைகளெல்லாம் துலைத்துவிட வேணுமென்று
இப்படி அந்நாட்டில் இந்தியர்க்காமிம்சையெல்லாம்
எப்படியுமொழிக்க எண்ணிவந்தார் காந்திஜியும்
கள்ளமில்லா இந்தியரைக்கஷ்டப்படுத்திவரும்
வெள்ளையரின் வீம்புகளை விலக்கவழி தேடினரே
இல்லாத ஏழைகளை இழிவு செய்து ஏங்க வைக்கும்
பொல்லா வழக்கமெல்லாம் போக்கவழி தேடினரே
படித்தவர் பணக்காரர் பவுசுமிக்கோர் என்றிருக்கும்
தடித்தனங்கள் அத்தனையும் தகர்க்கமனங் கொண்டாரே

---

## தென் ஆப்பிரிக்காவில் காங்கிரஸ் ஏற்படுத்தியது.

தாதா அப்துல்கம்பெனியின் தன்வழக்கை கோர்ட்டினிலே
வாதாடி ஞாயங்காண வந்தநம் காந்திஜியும்
வழக்கை வளர்த்துக் கொண்டு வம்புச்செலவாக்குவதை
விளக்கிடவே கட்சிக்காரர் விரும்பிச்சமாதானமானர்
வீட்டிலே சண்டைபோட்டு வீணய்ப்பணத்தையெல்லாம்
கோர்ட்டிலே கொட்டுவது கூடாதெனஉரைத்தார்
கட்சிகட்டிப்போவதினல் காசுசெலவாகுமின்றி
மிச்சம் ஒருசிறிதும் மீண்டுவரக்கண்டதுண்டோ
ஆகையினல் கட்சிக்காரர் ஆனமட்டும் ராசியாகப்
போவதுவேவீண்பொழுதும்பொருட்சிலவும்மிச்சமென்பார்
வக்கீலாய்க் காந்திமகான் வாழ்ந்து வந்தகாலமெல்லாம்
சிக்கனமாய் வரும் வழக்கை தீர்த்திடுவார் இவ்விதமாய்
அடிமைபட்டும் பாடுபட்டும் அரைவயிற்றுகஞ்சியின்றி
சிறுமைபடும் மக்களுக்குச் சேவைசெய்து வந்ததினல்
எங்குமே காந்திமகான் என்றபெயரோங்கிடவே
பங்கமில்லாது மக்கள் பரிந்துகூறிவந்தனரே
தாய்நாடு செல்வதற்குத் தானினைந்த காந்திஜியை
போகாது அங்கிருக்கப் போற்றினரே மக்களெல்லாம்
நல்லதென்று அங்கிருக்கும் நாளையிலே வெள்ளையர்கள்
பொல்லாத சட்டமொன்று போடநினைத்தாரே
இந்தியர்க்குப் பேச்சுரிமை இல்லையென்ற மசோதா
தந்திரமாய் கொண்டுவந்தார் சட்டசபைதனிலே
எப்படியும் இச்செயலை எதிர்த்து ஒழிப்பதென
ஒப்பரிய காந்திமகான் உறுதிகொண்டார் தம்மனத்தே

அந்நாட்டிலே வசிக்கும் அநேகவகை இந்தியரும்
எந்நாளும் ஒற்றுமையாய் இருக்கவேண்டுமென்றெண்ணி
மதம் ஜாதி பாஷைகளில் மாறுபட்ட இந்தியரை
இதம் சொல்லி ஓரினமாய் இழுத்துச் சபை கூட்டினுரே
எந்தமதமானுலும் என்ன பாஷை பேசினுலும்
சொந்தநாடு இந்தியாவெனச் சொல்லி சபை கூட்டினுரே
காந்திமகானுரையைக் கருத்தில் வைத்து இந்தியர்கள்
பாந்தமொடு எல்லோரும் பரிந்து ஒன்று சேர்ந்தார்கள்
இந்துக்கள் கிறிஸ்தவர்கள் ஏற்ற முசல்மான்கள்
சொந்தமென அன்றங்கே துணிந்து வந்து கூடினுர்கள்
இவ்விதமாய் நெட்டாலில் இந்தியக் காங்கிரசை
செவ்வையுடன் சேர்த்தமைத்தார் சிறந்த நம்காந்திமகான்
காங்கிரசை நன்கமைத்து கஷ்டப்படும் இந்தியர்க்கு
பாங்குடனே வேண்டும் பணியாற்றி வந்தாரே
புதிதாகச் சர்க்காரும் போடவந்த சட்டத்திற்கு
எதிராகக் காந்திமகான் ஏகக்கிளர்ச்சி செய்தார்
பத்தாயிரம் இந்தியரும் பரிந்து உடன் எதிர்க்க
செத்தது அச்சட்டமுமே ஜெனித்து வெளியாகுமுன்னே
காந்திமகான் ஆப்பிரிக்காக்கவர்ன்மெண்டாரை எதிர்த்து
மாந்தருக்காய்ப்பெற்றமுதல் மகத்தான வெற்றியிதாம்
இந்தமகாவெற்றியினுல் இந்தியர்கள் எல்லோரும்
சந்தோஷம் பொங்கிடவே சம்மர்த்தராகி வந்தனரே

---

## இந்தியா சென்று தன் குடும்பத்தை அழைத்துக் கொண்டு திரும்பவும் ஆப்பிரிக்கா வந்தது.

தென்னுப்பிரிக்காவில் செய்யவேண்டும் பணிகள்
பின்னுமிருப்பதினுல் பிரிந்த குடும்பமதை.
தன்னேடிருப்பதற்குத் தானழைக்கவேண்டுமென
எண்ணியே காந்திமகான் இந்தியாவந்தனரே
பாரதநாட்டிலுள்ள பல்வேறுகூட்டத்தாரும்
ஆரவாரத்துடனே அண்ணலேயுங் கண்டார்கள்
தென்னுப்பிரிக்காவில் செய்தயிவர் சேவையெல்லாம்
இந்நாட்டிலே தெரிந்து எங்கும் வரவேற்ருர்கள்
காந்திக்கு ஜே என்பார் கனத்தமாலே சூட்டிடுவார்
மாந்தருக்கெல்லாமுழைக்கும் மகாத்துமா வாழ்கவென்பார்
அஞ்சாத தீரர் என்பார் ஆப்பிரிக்கா வீரர் என்பார்
துஞ்சாது இந்தியரின் துயர்போக்க வந்தாரென்பார்
எங்கும் இவ்வாறு மக்கள் ஏற்றமரியாதை செய்து
பங்கமில்லாக் காந்திஜியை பாராட்டி வந்தார்கள்
மக்களுக்கு நன்மைசெய்யும்மார்க்கமதை காந்திஜியும்
மிக்கமகிழ்ச்சியுடன் மென்மேலும் பேசிவந்தார்
பின்னும் சிலநாளில் பிரிந்த குடும்பத்துடன்
எண்ணூறு இந்தியரும் இசைந்து உடன் வரவே
தென்னுப்பிரிக்காவும் செல்லவங்கு வெள்ளேயரும்
என்ன மோசம் வந்ததென இவரை எதிர்த்தார்கள்
யாரும் அறியாது அதிசயமாகவிங்கு
பாரதநாடு சென்று படைகூட்டி வந்திருக்கான்
இந்நாட்டை இந்தியர்க்கு ஏகபோகமாக்கிடுவான்
சொன்னலும் கேளானெனச்சூழ்ந்திவரைத்தாக்கினர்கள்

காலிகளும் முரடர்களும் கட்குடி வீணர்களும்
கூலிகளும் கூடிவந்து கூசாது தாக்கினர்கள்
எப்படியும் காந்திஜிக்கு இடருவந்துசேருமென்று
அப்பொழுது அங்கறிந்த அரியவெள்ளைமாதொருத்தி
காந்திஜிக்கு ஆபத்து கட்டாயம் நேருமென்று
தேர்ந்தவந்த வெள்ளைக்காரச்சீமாட்டி ஓடிவந்து
எவருமறியாதவாறு இருந்ததன் ஜாகையிலே
இவரையும் கொண்டு வைத்து ஏற்றவைகள்செய்துவந்தாள்
புத்திமிகுந்தவொரு போலிசுச் சூப்பிரண்டும்
பக்திமிகுந்திடவே பாதுகாவல்செய்து வந்தார்
"அடித்த முரடர்கள்மேல் அவசியமாய்க்கேசு
எடுக்கவேண்டு"மென்று பலர் இயம்பிடவே காந்திஜியும்
"துன்பப்படுத்தினேரைத்துன்பமுறச்செய்யாது
இன்பப்படுத்துவதே ஏற்றதெனக் கூறிவிட்டார்
காந்திமகான் இப்படியே கஷ்டப்பட்டு மக்களுக்காய்
சாந்தமொடு ஆப்பிரிக்கா தன்னிலே வாழ்ந்து வந்தார்

---

## எளிய வாழ்க்கை.

---

ஆடம்பர வாழ்க்கை அழியுமிந்தப்பூவுலகில்
கூடாது என்ற குணங்கொண்ட காந்திமகான்
வெள்ளையர்க்கு மத்தியிலே வேண்டுமதிப்படைந்தால்
உள்ள நிலைகண்டு நாட்டிற் குழைக்கலாமென்றெண்ணி
மேனுட்டுடை நடையை மேற்கொண்டுமே சில நாள்
வீணுயிருந்ததெல்லாம் விட்டொழித்தார் பின்னலே
"உடலுறுதிக்கல்லாது உணவுருசிக்கல்ல" வென்று
திடமாயறிந்ததனைச் செய்கையிலே கொண்டுவந்தார்

தாளித்த சாப்பாட்டைத் தள்ளிவிட்டு நல்லாட்டின்
பாலும் பழமும் பயறுகளும் உண்டுவந்தார்
தனக்குரிய ஆடைகளைத் தானே சலவைசெய்து
மனக்கவலையில்லாது மகிழ்ந்து உடுத்திடுவார்
வெள்ளை நாவிதன் முடி வெட்டமறுத்ததினுல்
கள்ளமின்றித் தன் முடியைக் கத்தரிக்கக்கற்றுக்கொண்டார்
"பழிபாவமில்லாத பல தொழிலைச்செய்வதினுல்
இழிவேதும் இல்லை''யென எண்ணியெதும் செய்திடுவார்
நாளாரம்பத்திலந்த நாகரீகமென்றுசொல்லும்
ஆடம்பரமெல்லாம் அடியோடு விட்டொழித்தார்
அன்பு ததும்பிடவே ஆப்பிரிக்காவில் சில நாள்
கம்பவுண்டர் வேலைகூட காந்திமகான் செய்து வந்தார்
புண்புறைகளைக்கழுவி புதியமருந்துவைத்து
பண்புபெறக்கட்டி பாதுகாப்பார் நோயினரை
கம்பவுண்டர் வேலையங்கு காந்திமகான் பார்க்கையிலே
அன்பிலார் வாழுமந்த ஆப்பிரிக்கா கண்டத்திலே
ஆங்கிலர்க்குப் போயருக்கும் ஆனபெரும் போரதிலே
பாங்குபெறத்தொண்டர்படை பலதிரட்டிக்காந்திமகான்
காயப்பட்ட போர்வீரருக்கான சிகிச்சைசெய்து
தாயமனத்துடனே தொண்டு செய்து வந்தனரே
இந்தவிதம் போயர் போரில் ஈடுபட்டுழைத்ததினுல்
வந்துவிடும் இந்தியர்க்கு வசதியென்று நம்பினுர்கள்
டற்பன் நகர்ப்பக்கத்திலே தகுந்த நூறு ஏக்கர் நிலம்
இந்தியர் குடியிருக்க ஏற்றமுடன் வாங்கியதை
குடும்பத்திற்கு மூன்று ஏக்கர் கொடுத்துப்பயிர் செய்து
வரும்படியும் பெற்றுவர வழி செய்யலானுர்கள்
பிள்ளைகள் கல்விகற்று பேதமைகள் நீங்குதற்கு
உள்ளபல கல்வியங்கு ஓதுவிக்கப்பட்டதுவே

மாணவர்க்குச் செந்தமிழும் மற்றும்பலமொழியும்
பூரணமாய்க்காந்திமகான் போதித்துவந்தனரே
செருப்புகள் தைப்பதற்கும் சிறந்ததொழில்காண்பதற்கும்
வருத்திவந்தார் மாணவரை வழக்கமிகக்கொண்டிடவே

---

## தென் ஆப்பிரிக்காவில் சத்தியாக்கிரகம்.

தென்னாப்பிரிக்காவின் சிறந்தவரசாங்கம்
அந்நாளில் இந்தியரை அங்கு விலக்கிவைத்து
அவர்கள் வசிக்குமிடம் ஆபாசமாயிருக்க
எவர்களும் நாடாத இழிந்த நிலைமையிலே
விளக்குகள் போடாது வீதிசுத்தம் செய்யாது
இழுக்குப்பிடித்திடவே இன்னல்பலசெய்தனவே
வெள்ளையர்க்கு நன்மைகளும் வேறவர்க்குத்தீமைகளும்
உள்ள நகரசபை உகந்து செய்து வந்ததுவே
இப்படியாகப் பல இடைஞ்சல்கள் இந்தியர்க்கு
செப்பமுடியாதவாறு செய்ததரசாங்கம்
அரசாங்கம் செய்து வந்த அநியாயம் அத்தனையும்
சரியான நீதிகொண்டு தகர்த்தெறிய வேண்டுமென்று
எண்ணிய காந்திமகான் எங்கும் கிளர்ச்சியோங்க
புண்ணிய சத்தியாக்கிரகம் புரிந்து வந்தாரெதிர்த்து
இந்தியர் அபிப்பிராயம் என்றவொரு பேப்பரையும்
சொந்தமாய் ஆரம்பித்து துணிந்து நடத்தி வந்தார்
அந்த நல்லபேப்பரிலே அவரெழுதும் கட்டுரைகள்
எந்தமனிதருக்கும் ஏற்றதாகவேயிருக்கும்
மக்களுக்கு நன்மைதரும் மாட்சி மிகும்நல்லுரைகள்
தக்கபோது நோக்குடனே தானெழுதி வந்ததினால்

ஜனங்களெல்லாம் வாங்கி சந்தோஷமாய்ப்படித்து
மனங்கனிந்து சத்தியாக்கிரக மார்க்கநலங்கண்டார்கள்
சர்க்கார் அநியாயச்சட்டங்களை எதிர்த்து
மிக்க மனந்துணிந்து மீறினர் மக்கள் பலர்
இவ்வாறு சட்டமீறல் எங்கும்பரவிடவே
ஒவ்வாத சர்க்காரும் உடனே திகிலடைந்து
காந்திமகானைப்பிடித்து கடுகிச்சிறையில் வைத்தார்
மாந்தரெல்லாம் ஓடும்படி மடக்கித் தடியாலடித்தார்
கூட்டம் போட்ட இந்தியரை கொண்டுசிறைசெய்தார்கள்
தோட்டாத்துப்பாக்கியாலும் சுட்டுமேவீழ்த்தினர்கள்
சர்க்கார் அடக்குமுறைச்சங்கடங்கள் அத்தனையும்
மக்கள்சகித்துக்கொண்டு மகிழ்ந்து போராடினர்கள்
தீங்கெவர்க்கும் செய்யாது செறுத்துப்போராடுகின்ற
பாங்கறிந்த சர்க்காரும் பதறித்திகிலடைந்து
இந்தியமக்களுக்கு இருக்கும் குறைகளெல்லாம்
தொந்தரவில்லாமல் தொலைத்துவிடுவோமென்று
காந்திமகானையும் கைதியான யாவரையும்
சாந்தமொடு விட்டுமே தான் சமாதானம் செய்தனரே
அன்று கவர்னராக அங்கிருந்த ஸ்மட்ஸ்துரை
சென்றுமே காந்தியுடன் செய்தார் உடன்படிக்கை
இந்த உடன்படிக்கையாலன்று இந்தியர்க்கு
தொந்தரவான பலசட்டம் தொலைந்ததுவே
எண்ணியவார் தம்வேலை ஈடேறி விட்டதினல்
புண்ணியஞ்சேர் காந்திமகான் புறப்பட்டார் தாய்நாடு
தாய்நாட்டில் காந்திஜிக்கு தக்கமரியாதையுடன்
தூயமகாத்மாவென்ற சொல்லும் பிறந்ததுவே

---

## காந்திமகான் இந்தியா வந்து சேவை செய்தல்.

ஆப்பிரிக்கா தன்னைவிட்டு அண்ணல் மகாத்துமாவும்
வாய்த்த நம் இந்தியாவில் வந்து வாழும் நாளையிலே
அந்நாட்டில் செய்துவந்த அரியபலசேவைகளை
இந்நாட்டு மக்களுக்கு இயம்பிவரும் வேளையிலே
தென்னுப்பிரிக்காவிற்கு செல்ல ஒப்பந்தம் பேசி
அந்நாளில் கூலிகளை அனுப்பிவந்தார்இங்கிருந்து
இந்தியக்கூலிகளை இனி அனுப்பக்கூடாதென்று
வந்த ஒருகிளர்ச்சி வலுத்தெங்கும் மூண்டிடவே
சர்க்கார் அதையடக்கத் தக்க நடபடிக்கை
மிக்கத் துரிதமுடன் மேற்கொண்டு வந்திடவே
கண்டறிந்த காந்திமகான் கவலைமிகப்பெருகி
சென்றெங்கும் மக்களுக்குச் செய்தார் பிரசங்கம்
நன்மை பெறநினைத்து நாட்டை விட்டு போனவர்கள்
துன்பப்படுங்கொடுமை சொல்லமுடியாது
பிள்ளைகுட்டிகளை விட்டுப் பிழைப்பதற்குப் போனவர்கள்
உள்ளபடியெவரும் உயிரோடு வந்ததில்லை
நன்மை செய்வோம் என்று சொல்லி நயந்து கூட்டிப்
பண்ணும் அநியாயம் பார்க்கமுடிகூடாது [போனவர்கள்
ஆகையினுல் கூலிகளை அயல்நாடு கூட்டிக்கொண்டு
போகாதிருப்பதற்குப் போடவேண்டும் சட்டமென்றூர்
இவ்வாறு காந்திமகான் எங்கும் கிளர்ச்சிசெய்ய
ஒவ்வாத சர்க்காரும் ஒத்துவந்தார் பின்னுலே
தென்னுப்பிரிக்காவில் செய்த இவர் சேவையெல்லாம்
முன்னுலறிந்ததினுல் முற்றும்பதறியன்று
ஒப்பந்தக் கூலிகளாய் ஒரு நாடும் இந்தியர்கள்
எப்பொழுதும்போகாது இயற்றினுர் சட்டமொன்றை

இப்பெரிய சட்டத்தினுல் இந்தியமக்களுக்கு
செப்பரிய நன்மைபல சிறந்தோங்கி வந்ததுவே
எந்தநாடு சென்ருலும் என்ன கடன்பட்டாலும்
சொந்தநாடு தேவையானபோது வந்து சேர்ந்திடலாம்
ஒப்பந்தங்கள் செய்தாலும் ஒழுங்குபல கொண்டாலும்
தப்பிதங்களானுலும் தாய்நாடு வந்திடலாம்
ஆடுமாடு விற்பதுபோல் அயல்நாட்டில் இந்துதேசக்
கூலிகளை விற்றதெல்லாம் கூடாதொழிந்ததுகாண்
நடப்பிணமா யன்றலைந்த நம்நாட்டு ஏழைகட்கு
விடாபிடியாய்வேலைசெய்துவெற்றிகொண்டார்காந்திமகான்
ஏழை விவசாயிகளுக் கேற்பட்ட துன்பங்களை
தாழாதுழைத்தவரும் சரிப்படுத்தி வைத்தாரே
பயிர்த்தொழில் செய்பவரைப்பாதித்த சட்டமெல்லாம்
அயர்ந்து விழுவதற்கு ஆனவழி செய்தாரே
சர்க்காரால் வந்தபல தடைகளையுந்தானெதிர்த்து
நற்காரியமனைத்தும் நன்கு செய்து வந்தனரே
இப்படியாய் காந்திமகான் ஏழைவிவசாயிகட்கு
அப்பொழுது நேர்ந்துவந்த அவஸ்தைகளை நீக்கிவந்தார்

---

## ஆமதாபாத் பஞ்சாலை வேலை நிறுத்தமும், சபர்மதி ஆச்சிரமமும்.

---

ஆமதாபாத்திலுள்ள அநேகபஞ்சாலைகளில்
வேலைசெய்யும் மக்களுக்கு வேண்டுங்கூலிகிட்டாததால்
எங்கும் கிளர்ச்சிசெய்ய எதிர்த்தார் முதலாளிகள்
அங்கதனைச் சீர்படுத்த ஆசைகொண்ட காந்திஜியும்

முதலாளிமார்களிடம் முயன்றும் பயன் கிட்டாததால்
தொழிலாளரைச்சேர்த்து துடங்கினரே போராட்டம்
ஆலைமுதலாளிகளும் அடங்காதுபோனதினல்
வேலைசெய்யும் மக்களுக்கு வேண்டும்பலன் கிட்டுதற்கு
எண்ணிய காந்திமகான் எங்கும்கிளர்ச்சியோங்க
புண்ணிய வேலை நிறுத்தம் புரியக்கிளம்பினரே [டாம்
வேலைக்குச்செல்லவேண்டாம் வேறெதுவும் சொல்ல வேண்
ஆலைமுதலாளிகளுக் கவஸ்தை யெதும் ஆகவேண்டாம்
என்றுரைக்க காந்திஜியும் இருந்ததொழிலாளரெல்லாம்
ஒன்றுபோல் அன்றுமுதல் ஒய்ந்திருந்தார் வேலையின்றி
நாடாது வேலைசெய்வோர் நாள்முழுதும் நின்றிடவே
ஓடாது ஆலைகளும் ஓய்ந்துறங்கி வந்ததுவே
வேலை நிறுத்தமதை வீணாக்கவேண்டுமென்று
ஆலை முதலாளிகளும் அஞ்சாதிருந்தனரே
எடுத்தகொள்கை எப்படியும் இனிதுவெற்றியாகவென்று
அடுத்தபடி ஆரம்பித்தார் அரிய உண்ணாவிரதம்
காந்திமகான் பட்டினியாய்க்கடுந்தபசு செய்திடவே
மாந்தரெல்லாம் ஒன்றுபோல மாபெருங்கிளர்ச்சிசெய்தார்
கிளர்ச்சி மிகுந்ததாலும் கிடைக்கும் லாபம் போனதாலும்
அதிர்ச்சியடைந்துமேதான் ஆலைமுதலாளிகளும்
காந்திமகான் சொன்னபடி கட்டுப்பட்டு ஏழைகட்கு
வேண்டுமட்டும் கூலிதர விரைந்துஒப்புக்கொண்டனரே
காந்திமகான் கிருபையினல் கஷ்டப்பட்டதோழர்களும்
சாந்தமிகும் நன்மைபெற்று சந்தோஷமானர்கள்.
இப்படியே ஏழைகட்கு இனிய சேவைசெய்துகொண்டு
ஒப்பரிய ஆச்சிரமம் உண்டாக்கி வந்தனரே
அகமதாபாத்தினுக்கு அருகினிலே ஓடுகின்ற
சபர்மதி நதிக்கரையில் தகுந்த நல்ல ஆச்சிரமம்

உண்டாக்கி உண்மையுள்ள உத்தமர்களைச்சேர்த்து
தொண்டாற்றி வந்தனரே துணிந்தமனத்துடனே
ஆச்சிரமந்தனிலே அங்கத்தினராவோர்
தேர்ச்சிபெறுமாறு செய்து வந்தார் வேண்டியவை
இவ்வாறு மக்களுக்கு ஏற்றபல நன்மை செய்து
செவ்வைமிகுந்தோங்கச்செய்து வரும் நாளையிலே
எங்குமே மக்களெல்லாம் ஏங்கி நடுங்கிடவே
சங்கடஞ்சேர் ஐரோப்பா சண்டை வந்து சேர்ந்ததுவே.

---

## 1914 ஜெர்மன் போரில் ஒத்துழைப்பும் சட்டமறுப்பும்.

---

ஆயிரத்துதொளாயிரத்து பதினாலிலேநடந்த
மாபெரிய ஐரோப்பா மகத்தான சண்டையிலே
இங்கிலாந்து ஜெர்மனியால் இடர்ப்படும் என்பதற்கு
எங்கும் அறிகுறிகள் இருந்துவந்தகாலத்திலே
இங்கிலீசு ராஜ்ஜியத்தில் இருக்கும்பலநாடுகளும்
அங்கதற்கு ஒத்தாசை அவசியம் செய்ததுவே
இங்கிலாந்திற்கொத்தாசை இந்தியாவும் ஒன்று சேர்த்து
சங்கையின்றிச்செய்யவேண்டிசர்க்காரும் கேட்டபோது
நமக்குச் சுதந்திரத்தை நல்காதிருக்கும்வரை
உகந்து பிரிட்டிஷார்க்கு உதவிசெய்யக்கூடாதென்று
லாலா லஜபதி ராய் நம் திலகர் போன்றபல
பேரான தலைவரெல்லாம் பேசிவரும் நாளையிலே
இந்தமகாயுத்தத்திலே எள்ளளவும் வெள்ளையர்க்கு
தந்துதவக்கூடாதென்று தடுத்துவரும் நாளையிலே

என்றும் அரசாட்சி இயற்றிவரும் வெள்ளையர்க்கு
ஒன்றையுங் கருதாது ஒத்தாசை செய்யவேண்டும்
இங்கிலாந்திற்காபத்து ஏற்படும் இந்நாளில்
அங்கதற்கு நாமுதவி அவசியம் செய்யவேண்டும்
என்றுமே காந்திமகான் இயன்றவரை ஆள்சேர்க்க
அன்றவரைத்திட்டியுமே அநேகர் எதிர்த்தார்கள்
எந்த எதிர்ப்பையும் எண்ணுதியன்ற மட்டும்
சொந்தப் பலங்கொண்டு துணிந்துதவி செய்துவந்தார்
உண்மையுடன் யுத்தத்திற்கு உதவிசெய்த காந்திஜிக்கு
வண்மையுள்ள சர்க்காரும் வாக்குறுதி தந்தார்கள்
சண்டை முடிந்தவுடன் தருவோம் சுதந்திரத்தை
என்று துரைத்தனத்தார் எடுத்து அறிவித்தனரே
வெற்றி கிடைத்தவுடன் விரைந்து சுதந்திரத்தை
அட்டியின்றித் தாரோமென அறிவித்தார் சர்க்காரும்
எந்த விபரத்தையும் எண்ணுது காந்திமகான்
அந்த மகாயுத்தத்திற்கு அதிகமுதவி வந்தார்
“இந்திய வாலண்டரி” என்ற உதவிப்படையை
அன்றமைத்துக் காந்திமகான் அரசாங்கத்திற்குழைத்தார்
கஸ்தூரிபாய் அம்மையாரும்கணவருடன் சேர்ந்துமேதான்
விஸ்தாரமா யுத்தத்திற்கு வேண்டும் வேலை செய்துவந்தார்
இந்தியர் ஒத்தாசையினுல் இங்கிலாந்து வெற்றிபெற
தந்த வாக்குறுதியினைத் தவறினுரே சர்க்காரும்
சண்டை முடிந்தவுடன் தருவோம் சுதந்திரமும்
என்ற மொழி பொய்த்ததுமே ஏமாந்தார் காந்திமகான்
வெற்றி கிடைத்ததுமே வேண்டும் சுதந்திரத்தை
பெற்று விடலாமென்று பிதற்றியதும் பொய்யாச்சே!
இப்படிப் பொய்சொல்லி ஏமாற்றும் சர்க்காரை
எப்படியும் நாமொருகை இனிப்பார்க்க வேண்டுமென்று

எண்ணி மனந்துணிந்து எல்லோர்க்கும் சொல்லியல்லோ
தென்னிந்தியாமுழுதும் செய்தார் பிரயாணம்
அந்தப் பிரயாணத்திலே அரிய நம் ராஜாஜியை
சந்தித்து வேண்டுவன தனித்துரைத்து மீண்டனரே
இடகால பேதங்களுக்கேற்றபடி தேச சேவை
திடமாகச் செய்துவரத் தெரிவித்து வந்தனரே
"இந்தியப் பாதுகாப்பு" என்ற ஒரு சட்டமதை
அந்தநாள் கொண்டுவந்தார் ஆங்கிலேய சர்க்காரும்
எந்த விசாரணையும் இல்லாது எவ்விடத்தும்
சந்தேகப்பட்டவரைத் தாக்குதற்குகந்த சட்டம்
அப்படிப்பட்ட அநியாயசட்டமதை
எப்படியுந் துலைக்க இன்றே வழிசெய்யவென்று
சக்தியுள்ள காந்திமகான் சத்யாக்கிரகம் செய்து
மிக்கத்துணிவுடனே மீறினர் சட்டமெல்லாம்
தேசமெங்கும் தொண்டர்பலர் சேர்ந்துசட்டம் மீறிடவே
மோசமுடனடக்கி முனைந்து சிறைசெய்தார்கள்
எந்த விசாரணையும் இல்லாது எக்காலும்
சந்தேகப்பட்டவரை ஜெயிலிலே வைப்பதற்கு
ரவுலட்டுச் சட்டமென்று ராத்திரியே தானியற்றி
அமுலுக்கு கொண்டுவந்து அடக்கினரே தொண்டர்களை
அநியாயமாய் வந்த அவசர சட்டமதை
துணிவாகக் காந்திஜியும் துலைத்துவிடவேணுமென்றார்
எங்கும் ஜனங்கள் கூடி ஏகக்கிளர்ச்சி செய்ய
பங்கமுள்ள சர்க்காரும் பதறி அடக்கிவந்தார்
அஞ்சாத பஞ்சாப்பு அமிர்தசரசினிலே
துஞ்சும்படி மக்களை சுட்டான் டயர் மடையன்
பஞ்சாப் படுகொலைபோல் பாரினிலே வேறெங்கும்
அஞ்சாக் கொலைபழிகள் ஆனதில்லை என்பார்கள்

## பஞ்சாப் படுகொலை.

"இந்தியப் பாதுகாப்பு" என்று சொல்லி வெள்ளையரும்
அந்த நாள் கொண்டு வந்தார் அநியாயசட்டமொன்றை
ரவுலட்டுச் சட்டமென்ற ஞாயமில்லாச் சட்டமிதை
அமுல்நடத்தக் கூடாதென்று அறிக்கையிட்டார்காந்திஜியும்
எல்லோரும் ஒன்று சேர்ந்து இக்கொடிய சட்டமிங்கு
செல்லாது போகவழி செய்யவேண்டுமென்றுரைத்தார்
அப்படியே நல்லதென்று அங்கங்கே மக்கள்கூடி
ஒப்பரிய கண்டனங்கள் உகந்துபல செய்துவந்தார்
கண்டனங்கள் செய்வோரும் காங்கிரசில் சேர்வோரும்
தண்டனைக்குள்ளாவாரென்று சர்க்காரும் கூறிவந்தார்
இந்தவிதமெதிர்ப்பு எங்கும் நடந்ததுபோல்
அந்தமிகும் பஞ்சாப்பில் அதிகம் நடந்ததுவே
கண்மூடிச் சர்க்காரும் கண்டபடியடக்க
எண்ணிலாச் சங்கடங்கள் எங்குமிகுந்ததுவே
மகாத்மாகாந்திஜியும் மகாதேவ தேசாயும்
புகுந்தனரே பஞ்சாப்பில் புறளிகளை நீக்கவென்று
காந்திமகான் பஞ்சாப்பில் கால் வைக்கக்கூடாதென்று
சாந்தமில்லாச் சர்க்காரும் தடைச்சட்டம் போட்டார்கள்
சட்டத்தை மீறியன்று தான்சென்ற காந்திஜியை
திட்டப்படி கைதுசெய்து சிறைச்சாலை கொண்டு சென்றார்
பஞ்சாப்பு நாட்டினிலே பலவழியிலுஞ்சிறந்து
அஞ்சாத வீரம் பொங்கும் அமிர்தசரஸ் மாநகரம்
எங்குமே கண்டறியா இன்பமிகுந்தோங்கும்
தங்கநல்ல கோவிலுள்ள தனிப்பெரும் நகரமதில்
நாலுபக்கம் வீதி சூழ நடுவிலே சுத்துச்சுவர்
சாலஉயர்ந்தோங்கும் தக்க நான்கு வாசலுடன்

இப்பெரிய மைதானத்தை எழில்மிகுந்த நல்லிடத்தை
எப்பொழுதும் மக்கள்கூடி இருக்கும் பூந்தோட்டமிதை
ஜாலியன் வாலாபாக் கென்று சாற்றுமிந்தயிடத்தே
நாலுபக்க ஊரிலுள்ளோர் நாடிவந்துகூடுமிங்கே
எங்கும் ரவுலட் சட்டம் எதிர்க்கக்கூட்டம் போட்டதுபோல்
இங்கும்பல மக்கள் வந்து எப்படியோ கூடினரே
அமிர்தசரஸிலன்று அரியபெருஞ்சந்தையினல்
பெரிய ஜனக்கூட்டமெங்கும் பெருகியிங்கு வந்ததுவே
சர்க்காரால் போடப்பட்ட தடையுத்தரவதனை
மக்களறியாது மகிழ்ந்து வந்து கூடினரே
சந்தைகூடாதிருக்கும் தன்மையையும் நோக்காது
வந்தவெளியூராரும் வகையின்றிக்கூடினரே
கூட்டம் போடக்கூடாதென்று கொடிய தடையுத்தரவு
போட்டிருந்தும் அஞ்சாது புரட்சி மிகுந்தோங்குதென்று
ஊரடங்கு சட்டம்போட்டு உடனே எங்கும் ராணுவத்தை
நேரடியாய்க் கொண்டுவந்து நெட்டுரம் செய்தனரே
சந்தைக்காக வெளியூர் தன்னில்நின்று வந்தவர்க்கு
இந்தவிபரங்கள் எதுவுந்தெரியாததினல்
சந்தேகமின்றியந்த சாலியன் வாலா பாக்கில்
வந்து பெருங்கூட்டமாக வண்மையொடு வீற்றிருந்தார்
எவரோ பிரசங்கம் இயற்றவருகிருரென்ற
தவருன செய்தியினல் ஜனங்கள் வந்து கூடினதே
விமானமொன்று மேல்பறக்க வீதியெங்கும் ராணுவங்கள்
கவனமொடு நின்றுமேதான் காவல் செய்து வந்ததுவே
வஞ்சகமில்லாத மக்கள் வகையெதுவுந்தோன்ருது
அஞ்சலின்றி அப்பாக்கில் அமர்ந்திருக்கும் வேளையிலே
பாக்கின் நாலுவாசலுக்கும் பயங்கரப்பீரங்கியை
தாக்குதற்கு ஏற்றவாறு தயார்செய்து வைத்தனரே

சுத்துச்சுவரோரங்களில் துப்பாக்கி கைப்பிடித்து
பத்தி பத்தியாகவல்லோ படைவீரர் வந்து நின்றார்
மனிதரை மாய்ப்பதற்கு மயங்கா மனம்படைத்தோர்
அணிவகுத்து நின்றுமேதான் ஆர்ப்பாட்டம் செய்தார்கள்
தலைவன் டயர் மடையன் சாத்வீக மக்களையும்
துலையும்படி இப்பொழுதே சுட்டிடுங்கள் என்றிடவே
உயிர்கொன்று வாழுவதே உரியதொழிலாய்க் கொண்ட
வெறிபிடித்த வீரர்களும் விட்டனரே குண்டுகளை
ஒன்றுமறியாது உகந்திருந்த மக்களையும்
கொன்று குவித்தனரே கொடிய மனம் படைத்தோர்
ஓடிஒளிவதற்கும் ஒருவழியுமில்லாது
கூடிநின்று சுட்டனரே கொடுமை மிகுந்திடவே
வாசலிலே வைத்திருந்த வலிமையுள்ள பீரங்கியால்
மேலும் மேலும் சுட்டனரே மேதினி நடுங்கிடவே
வாசலிலே பீரங்கி வாய்திறந்து சுட்டதினால்
போகவழியில்லாது பொசுங்கினரே மக்களெல்லாம்
கோட்டைச்சுவர் மீதேறி குதித்தோடும் மக்களையும்
தோட்டாத்துப்பாக்கியினால் சுட்டுமே வீழ்த்தினார்கள்
அழுகையும் கூக்குரலும் அதிகரித்து ஓங்கிடவே
பழுதில்லா மக்களுயிர் பதைபதைக்க மாண்டனரே
அரைச்சண நேரத்திலே அநியாயமாய்க்கொன்று
பிணக்களமாக்கினரே பிசாசினத்தைச்சேர்ந்தவர்கள்
மாலைநேரமானதினால் மயானமான அவ்விடத்தை
சீலமுடன் வேறுயாரும் சென்றுபார்க்க கூடவில்லை
ஊரடங்கு சட்டமங்கு உள்ளதினால் யாரும் வெளி
யேற முடியாதவாறு இருந்தனரே வீடுகளில்

தெருவில் தலை நீட்டுவோரைசிதைத்தெரியத்தோட்டாக்கள்
சொருகிய துப்பாக்கியுடன் துணிந்து நின்றார்வீரரெங்கும்
லைட்டுக்கிடையாது நல்லதண்ணீர் கிட்டாது
அயர்ந்துமே மக்களெல்லாம் அவதியுற்றார் வீடுகளில்
எங்கும்பயமிகுந்து இருந்ததினால் மக்கள் பலர்
அங்கம்துடித்திடவே ஆவிதுறந்தனராம்
செத்தவரைத் தூக்கிவெளிச்செல்லமுடியாததினால்
சத்தமின்றி வீட்டினுக்குள் சமாதி செய்து வந்தனராம்
பாக்கில் மடிந்திருந்த பலநூறுமக்கள் நிலை
யார்க்குந்தெரியாது அலங்கோலமானதுவாம்
நல்ல நடுராத்திரியில் நாய் நரிகள் ஊளையிட்டு
செல்லரிக்கும் பிணங்கள் தின்றுமகிழ்ந்ததுவாம்
இப்படியாகவேதான் இன்னும்பல ஹிம்சைசெய்து
அப்பொழுது மக்களையும் அவஸ்தைபடுத்தினராம்
அஞ்சாதுமக்களையும் அநியாயமாய்க்கொன்ற
பஞ்சாப் படுகொலையின் பரிதாபந்தாங்காமல்
நாள்மூன்றுகாந்திமகான் நல்லவிரதமிருந்து
பாழும் பழியனைத்தும் பரனறிய வேண்டிநின்றார்
அமிர்தசரஸினிலே அன்று டயர் செய்த
தவறை நினைந்திடிலோ சகிக்கமனம் கூடவில்லை
சாலியன் வாலாபாக் சம்பவத்தைச்சர்க்காரும்
சீலமுடனன்று தீர விசாரித்தறிந்தும்
செய்தது சரியென்று தீர்ப்பும் அளித்தனராம்
ஐயோ அநியாயம் ஆண்டவனுக்கே வெளிச்சம்
இந்தஅநியாயம் எல்லாமொழிவதற்கு
அந்தமிகும் காங்கிரசை அதிகரித்தார் காந்திமகான்
பேப்பரெல்லாம் காங்கிரசை பின்பற்றி வந்திடவே
ஊக்கம் மிகுந்தெங்கும் உயர்ந்தது சத்யாக்கிரகம்

## ஒத்துழையாமை இயக்கம்.

"சண்டை முடிந்தவுடன் தருவோம் சுதந்திரமும்"
என்று மளுப்பிவிட்ட இங்கிலீஷ் அரசினுக்கு
தக்கவொருபாடமதைத் தந்துணர்த்தவேணுமென்று
பக்குவமாய் காந்திமகான் பலவழியும் நன்கறிந்து
அரசியலில் இந்தியர்கள் ஆங்கிலேயர்க்குதவி
புரியாதிருப்பதற்கு புதிய வழி ஒன்றுகண்டார்
"ஒத்துழையாமை" யென்னும் உயர்ந்த இயக்கமதில்
உத்தியோகஸ்தர் பலர்உகந்து ஒன்று சேர்ந்தார்கள்
ஆயிரத்து துளாயிரத்து இருபதிலே இவ்வியக்கம்
மாபெருங்கிளர்ச்சியோங்க மலிந்ததித் தேசமெங்கும்
சர்க்காரிடம் காந்திபெற்ற தங்கப்பதக்கத்தையும்
மற்றும் பல பட்டத்தையும் மதியாது வீசிவிட்டார்
அச்சமின்றிகோர்ட்டினிலே "ஆஜராகமாட்டோ" மென்று
லட்சக்கணக்கான வக்கீல் ராஜிஞமாச் செய்தார்கள்
காந்திஜியைப்பின்பற்றி கண்ணியமிருந்தபலர்
சார்ந்த தங்கள் பட்டங்களை தயங்காது தான் துறந்தார்
மாணவர் கல்லூரி செல்ல மறுத்ததொடு தொண்டருக்கு
ஆனமட்டும் ஒத்தாசையாகப்பல செய்துவந்தார்
தேசமெங்கும் இவ்விதமாய்ச் சேர்ந்து கிளர்ச்சிசெய்ய
ஆசைமிக்க சர்க்காரும் அலுத்துத்திகிலடைந்து
தடியாலடித்தார்கள் ஜெயிலில் வைத்து வாட்டினூர்கள்
துடியாய்த்துடித்தலறத் தொண்டர்களைத் தாக்கினூர்கள்
தேசமெங்கும் இவ்வாறு திகைத்து நடுநடுங்க
மோச அடக்குமுறை மும்முரமானதினூல்
மக்கள் பலாத்கார மார்க்கமதிலே யிறங்கத்
தக்க புரட்சியெங்கும் தலைதூக்கலானதுவே

இதையறிந்த காந்திமகான் எடுத்த ஒத்துழையாமை
தனை நிறுத்தி மக்களையும் சாந்தப்படுத்தினரே
கலகஞ்செய்யும் மக்களெங்கும் கலகம்விட்டமைதி கொள்ள
ஒருவாரம் காந்திமகான் உண்ணுவிரதங்கொண்டார்
உலகமெங்கும் பேருபெற்ற உயர்ந்த பெருந்தலைவர்
திலகர்பெருமானுமன்று தெய்வலோகம் சென்றனரே
பாரதமாதாவிற்குப் பலத்த பணிசெய்துவந்த
வீரத்தவப்புதல்வர் விண்ணுலகம் சென்றனரே
திலகர் உயிர்நீத்த செய்திகேட்டு காந்திஜியும்
பலவாறு அன்று துயர்ப்பட்டு மனந்தேறிவந்தார்
இந்தவிதமாக இருக்குமந்த நாளையிலே
அந்தமிகுந்தோங்கும் அரியபம்பாய் நகரில்
நடந்த பெருங்காங்கிரசு நல்லமகாநாட்டினுக்கு
தலைமைகொண்டு காந்திமகான் தக்கபிரசங்கம் செய்தார்
இந்தியர்கள் எல்லோரும் இனியிந்தச் சர்க்காரில்
எந்தஉத்தியோகமும் ஏற்றிடல்கூடாதென்றார்
வரியெதுவும் நல்காது வம்பு செய்யுஞ்சர்க்கார்க்கு
உரிய ஒரு நல்வழியை உணர்த்தவேண்டுமென்றுரைத்தார்
எங்கும் கலவரமும் ஏற்றகிளர்ச்சிகளும்
பொங்கிவரக் காந்திஜியே போதிய காரணமென்றார்
ராஜசுயாட்சியக் கட்சி நடத்தியதால் நாட்டினிலே
மோசம்பல வந்ததென்று முனைந்தனரே காந்திஜிமேல்
கலங்கி நின்ற சர்க்காரும் காந்திஜியை கைது செய்து
விளங்கிடவே ஆருண்டு விதித்தாரே தண்டனையும்
ஜெயிலில் இருக்கும்போது சிறந்த சில புத்தகங்கள்
அயராதெழுதி வந்தார் அன்புததும்பிடவே

இருந்தசிறைச்சாலையிலே இரண்டு வருடத்திலே
குடல் நோயும் கண்டிடவே குணப்படுத்த சிகிச்சைசெய்தார்
**ஆப்ரேஷன்** சிகிச்சை ஆனதினால் காந்திமகான்
தேகப்பலங்குன்றி ஜெயிலில் இருந்தனரே
இந்த நிலைகண்டு இணங்கியே சர்க்காரும்
அன்றே நம் காந்திஜியை அன்பாய் விடுவித்தார்.

---

## காந்தி மகான் செய்த நிர்மாணத்திட்டம்.

---

சிறைச்சாலை விட்டுவந்த தெய்வீகக் காந்திமகான்
நினைத்தாரே மக்களுக்கு நீங்காத நன்மை செய்ய
எக்காலும் இந்தியர்கள் இன்புற்று வாழ்வதற்கு
தக்கபல திட்டங்களைத் தயாரிக்கலானாரே
இங்கு விளையும் பருத்தி இன்னுமொரு நாடுசென்று
அங்குதுணியாகி வர அதை நாமும் வாங்குவதால்
எவ்வளவோ நஷ்டம் நமக்கேற்படவும் அந்நியர்க்கு
அவ்வளவும் ஆதாயம் ஆகுமிதை நன்கறிவோம்
கையாலே நூல் நூற்று கதராடை நெய்துமிங்கு
உய்யும் மனிதரெல்லாம் உடுத்திவருவோமானால்
நன்மை பெருகிவரும் லாபமதிகமாகும்
அந்நியத்துணிகளெல்லாம் அடியோடொழிந்துவிடும்
வேலையில்லாத்திண்டாட்டம் விட்டொழியும் மக்களுக்கு
காலமெல்லாம் நன்மையொடு கஷ்டம் வாராதிருக்கும்
என்று மனதிலெண்ணி எந்தை மகாத்துமாவும்
அன்று தொடங்கினாரே அரிய கதரியக்கம்

ராட்டையிலே நூற்கவேண்டும் நல்லகதர் நெய்யவேண்டும்
நாட்டிலுள்ள மக்களெல்லாம் நாடியதைக் கட்டவேண்டும்
அந்நிய நாட்டுப்பொருளை அறவேயகற்றிவிட்டு
இந்நாட்டுச்சாமான்களை இயன்றவரை வாங்கவேண்டும்
மேனாட்டுச்சாமான்கள் மீதுள்ள மோகமெல்லாம்
தானே தொலைப்பீரென்று சாற்றிவந்தார் காந்திஜியும்
சுதேசி இயக்கமென்று சொல்லுமிதில் மக்கள் சேர்ந்து
வசதியென நாட்டுப்பொருள் வாங்கி வரலானார்கள்
ராட்டினிலே நூற்றூர்கள் நல்லகதர்கட்டினார்கள்
தேட்டமொடு நாட்டினுக்குச் சேவைசெய்து வந்தாரர்கள்
மதுவிலக்குத் திட்டமென்று மற்றுமொரு நல்வழியை
புதிதாகக் காந்திமகான் புகட்டி வந்தார் மக்களுக்கு
கள்ளுக்குடிப்பதினால் கஷ்டம்பலவாவதொடு
உள்ளபொருளுந் தொலைந்து ஓட்டாண்டியாகிடுவார்
அடிதடிக ளாகியெங்கும் அவதி மிகுந்திடவே
குடிவெறிக்கேசுகளும் கோர்ட்டில் குவிந்துவிடும்
வழக்காடும் வக்கீல்கும் வரிவாங்கும் சர்க்கார்க்கும்
விளக்கமுடனே பணமும் மென்மேலும் வந்து சேரும்
தக்க வருமானம் சர்க்கார்க்கு லாகிரியால்
எக்காலும் வந்ததினால் இரங்காது காத்து வந்தார்
இந்த விபரமெல்லாம் எண்ணிவந்த காந்திமகான்
நிந்தைமிகும் லாகிரியை நீக்கவழிதேடினரே
கள்ளுக்குடிக்க வேண்டாம் கள் மரங்கள் போடவேண்டாம்
எந்நாளும் கள்ளுக்கடை. ஏலமெடுக்கவேண்டாம்
இந்திய மக்களெல்லாம் இழிந்த மதுவிலக்க
சொந்தமொடு மனதில் துணிவு கொள்ளவேணுமென்றூர்
இப்படிக் காந்திமகான் எடுத்துரைக்க மக்கள் பலர்
அப்படியே செய்து வந்தார் அரிய மதுவிலக்கை

இழிகுலத்தார் தீண்டாதார் என்று சிலமக்களையும்
பழிசுமத்தி நாட்டினிலே பரிகசித்து வந்தார்கள்
நாய் கழுதை செல்லுகின்ற நல்லநடு வீதியிலும்
போயவர்கள் நிற்பதுவும் பொல்லாது என்பார்கள்
குளிக்குமிடங்களிலும் கும்பிடும் கோவிலிலும்
படிக்கின்ற பள்ளியிலும் பலர் செல்லும் சந்தையிலும்
நடிக்கின்ற கூத்தினிலும் நண்ணியவர் வந்தாக்கால்
இழுக்குப்பிடிக்குமென்று இகழ்ந்துமங்கே தள்ளிடுவார்
இப்படி இருந்துவந்த இழிசெயலைப் போக்கிடவே
அப்பொழுது செய்துவந்தார் ஹரிஜனமுன்னேற்றம்
பாஷை பதினெட்டு பாரத நாட்டினிலே
பேசிவருவதினால் பிரிவு பலவாகுதென்று
இந்தியர்கள்எல்லோர்க்கும்ஏற்றபொதுப்பாஷையொன்றை
நன்று தெரிந்தெடுக்க நாட்கள் பலஆராய்ந்து
அதிக மக்கள் பேசுகின்ற அரிய ஹிந்துஸ்தானியதை
உரிய பொதுப்பாஷையாக உகந்துமே தேர்ந்தெடுத்து
தமிழ்நாட்டுமக்களதைத் தவறாது தான்படிக்க
அயராது வேண்டுவன அன்று செய்து வைத்தனரே

---

**வகுப்பு வாதத்திற்காக 21 நாள் உண்ணாவிரதம்**
**பெல்காம் காங்கிரஸ், கதர்ப்பிரச்சாரத்திற்காக**
**தேச முழுவதும் பிரயாணம்.**

---

இந்நாட்டிலே வசிக்கும் எண்ணிலா மக்களுக்குள்
எந்நாளுமே பிரிவு இருந்து வருகின்றனவாம்
இந்துக்கள் கிருஸ்தவர்கள் ஏற்ற முசல்மான்கள்
அந்தமிகும் சீக்கியர்கள் அவதியுறுந்தீண்டாதார்

இந்தவிதமாக இன்னும் பலவகுப்பு
முந்தைநாள் தொட்டு மொழிந்துவருந்தேசமிது
ஒவ்வொரு வகுப்பினிலும் உட்பிரிவு எத்தனையோ
வெவ்வேறு விதமாக விளங்கி வருந்தேசமிது
ஜாதியிலும் உட்பிரிவு சமயத்திலும் உட்பிரிவு
பேசுகின்ற பாஷையிலும் பெருத்த பல உட்பிரிவு
இப்படிப்பல பிரிவு இருந்துமுந்திக்காலங்களில்
எப்பொழுதும்ஒற்றுமையாய்இருந்துவந்தார் மக்களெல்லாம்
பாரத நாட்டிலுள்ள பல வகுப்பு மக்களுமே
ஓர் தாயின் பிள்ளைகளாய் ஒற்றுமையாய் வாழ்ந்துவந்தார்
ஜாதிமதபேதத்தினுல் சங்கடங்களில்லாது
நீதி மிகுந்தோங்க நிம்மதியாய் வாழ்ந்து வந்தார்
வெள்ளையர் ஆட்சியினுல் விளைந்த விபரீதமதால்
கள்ளங்களும் பேதங்களும் கபடங்களும் வந்ததுவே
உயர்வு தாழ்வு ஏமாற்று உருட்டு பிறட்டுள்ளதெல்லாம்
அயருறவே மக்களுக்குள் அதிகரிக்கலானதுவே
தந்தகடனைக் கொடுக்கத்தவறிடில் காராம்பசுவை
கொன்ற தோஷம் சேருமென்று கூறி ஞாயங்கொண்டநாடு
கையெழுத்து ரேகை சாட்சி கச்சேரிப்பதிவனைத்தும்
பொய்யாகப் போதியன புகன்றுவரச்செய்தனரே
சரித்திரங்கள் மாறிடவும் தக்கவைகள் மீறிடவும்
பிரித்தாள ஏற்றபல பேதமைகள் செய்தனரே
அந்நியரின் ஆதிக்கத்தால் அடைந்த பொருமையினுல்
தன்னயங்கொண்டு மக்கள் சச்சரவு செய்தார்கள்
ஜாதி மதத்திற்கேற்ப தனிப்பிரிவு வேண்டுமென்று
பேதமிகுந்திடவே பெருங்கிளர்ச்சி செய்தார்கள்
அரசாங்கம் செய்பவரின் அடிவருடிக் கட்சியெல்லாம்
பிரசங்கம் செய்ததுவே பிரிவு பலவாகிடவே

கதிபெறப் பாடுபடும் காங்கிரசினுக்கெதிராய்
சதிசெய்தும் வந்தார்கள் தனித்தனி பிரிவு கொள்ள
ஊரிரண்டு பட்டதானல் உகந்தது கூத்தாடிக்கென்னும்
சீரினைப்போல் வெள்ளையரும் சிந்தை களித்துவந்தார்
இந்த விபரமெல்லாம் இனிதறிந்த காந்திமகான்
அன்று வகுப்புத்தலைவர் யாவரையும் ஒன்றுகூட்டி
எல்லோரும் ஒற்றுமையாய் இருப்போமென்று தீர்மானம்
சொல்லுவரை யானுணவு தொடுவதில்லையென்றுரைத்து
உண்ணுவிரதமதை உடனடியாய்க் கொண்டுதான்
எண்ணம் எதுவுமின்றி இருந்தாரிருபத்தொருநாள்
ராட்டினிலே நூற்றுக்கொண்டு நலமில்லா வகுப்புவாதக்
கேட்டையொழிக்கவென்று கிரங்காவிரதமிருந்தார்
ஒருநாளுணவில்லையெனில் உடலிலுயிர் நில்லாது
இருபத்தொரு நாளுணவு இல்லாதிருந்து வந்தார்
ஏசுநாதர் நாற்பது நாள் இருந்த உபவாசம்போன்று
மாசில்லாக் காந்திமகான் மகிழ்ந்திருந்து வந்தனரே
இந்த உலகமெங்கும் இவ்விபரம் ஓங்கிடவே
வந்துதலைவரெல்லாம் வணங்கி நின்ருர் காந்திஜியை
இயன்றவரை எல்லோரும் இனி ஒன்று சேர்வோமென்று
வகுப்புத்தலைவரெல்லாம் வாக்குறுதி செய்திடவே
உண்ணுவிரதமதை உடன் நிறுத்தி பெல்காமில்
அந்நாள் நடந்த காங்கிரஸ்க்கருந் தலைவராக வந்தார்
அந்தமகாநாட்டினிலே அண்ணல் நம் காந்திமகான்
இந்தியக்காங்கிரசின் ஏகத்தலைவராஞர்
காங்கிரஸ் தலைவராகி கதர்ப்பிரசாரஞ்செய்து
பாங்காயித் தேசமெங்கும் பரிந்து சுற்றி வந்தனரே
தென்னிந்தியாவிலுள்ள திருவாங்கூர் ராஜ்யத்தில்
வின்னமில்லா வைக்கம் என்று விளங்கும் தலமதிலே

தீண்டாத மக்களொரு தெருவினிலே செல்லுதற்கு
ஆண்டுரிமை யில்லாது அவதிப்படலானுர்கள்
அங்கு வந்த காந்திமகான் அதையறிந்து ஆற்ருமல்
எங்கும்கிளர்ச்சியோங்க எடுத்தார் சத்தியாக்கிரகம்
வைக்கம் நகர்தனிலே வந்து மகான் நின்றதினுல்
திக்கெங்கும் தொண்டர்படை திரண்டு வரலானதுவே
தீண்டாத மக்களையத் தெருவில் கொண்டு செல்லுதற்கு
வேண்டுமட்டும்தொண்டர்கூட்டம்விரைந்துவந்து கூடியதே
வருகின்ற தொண்டர்களை வலிய ஜெயில் கொண்டு சென்றும்
பெருகினவே மென்மேலும் பெருங்கடல்போல் அங்குவந்து
இதையறிந்த சர்க்காரும் இனிபடக்கபேலாதென்று
பதறித் தீண்டாதாரந்தப் பாதை செல்லவிட்டனரே
வைக்கத்திலே வெற்றிபெற்று வலிமைகொண்டகாந்திமகான்
தெற்கேயுள்ள ஊரெங்கினும் சென்றுபிரசங்கம் செய்தார்
கைனுலே நூற்று நெய்த கதராடை கட்டுவதே
உய்யும் வழியற்றவர்க்கு உதவி செய்தலாகுமென்ருர்
கதருற்பத்திக்காக கணக்கற்ற மக்களெங்கும்
பரிசும் பணமுடிப்பும் பரிந்தளித்தார் காந்திஜிக்கு
காந்திமகான் காருசெல்லும் காட்டுமார்க்கரோட்டினிலும்
சாந்தமொடு மக்கள்கூடி தரிசித்தும் சென்றனரே
கண் கொள்ளா மக்களெங்கும் கண்டு தரிசித்திடவே
அன்புள்ள காந்திமகான் அன்று பிரயாணம்செய்தார்
கதர்ப்பிரசாரத்திற்காய் கண்யமுள்ள காந்திமகான்
பரதகண்டமுழுதும் பரிந்து சுற்றி வந்தனரே
ஆயிரத்துத்தொளாயிரத்து இருபத்து ஐந்தினிலே
பாடலிபுரமென்னும் பாட்னுவிலே கூடி
அகில இந்திய நூல் நூற்கும் அரிய தொழிற்சங்கமதை
மகிமையொடு ஆரம்பித்து மக்களுக்கு நன்மைசெய்தார்

கதருடுத்தல் நூல் நூற்றல் காங்கிரஸின் அம்சமென்று
இதம்பெறவே காந்திமகான் இனிதுணர்த்தி வந்தனரே

## சைமன் கமிஷனும் கல்கத்தா காங்கிரசும்

ஆயிரத்து தொளாயிரத்து இருபத்து எட்டினிலே
சீமையிலேயிருந்து வந்தது சைமன் கமிஷன்
இந்தியர்க்கு வேண்டியதை இனிது தெரிந்துவர
அன்றனுப்பி வைத்தனரே அந்தக்கமிஷனையும்
சுயராஜ்யம் வேண்டுமென்று துணிந்து நிற்கும் இந்தியர்க்கு
நயங்காட்டி நாட்கடத்த நாடிவந்த கமிஷனது
உள்ளத்தில்கள்ளம்வைத்து உண்மையுள்ளோர்போல்
கள்ளமன வெள்ளையரால் கட்டிவிட்டகமிஷனது [நடிக்கும்
இந்தவிபரமெல்லாம் இனிதறிந்த காங்கிரசு
அன்றதனைப்பகிஷ்கரிக்க அறிக்கையிட்டுவந்தது துவே
காங்கிரஸ் அறிக்கைபடி கண்ணியமுள்ள மக்களெங்கும்
பாங்கிலாக் கமிஷனதைப் பகிஷ்கரித்து நின்றனரே
கருப்புக்கொடி பிடித்து கடைகளெல்லாமடைத்து
ஹர்த்தால் அனுஷ்டித்து ஆர்ப்பாட்டம் செய்தார்கள்
இவ்வாறு செய்துவந்த ஏற்றமுள்ள இந்தியரை
ஒவ்வாது சர்க்காரும் உடனடக்கலானார்கள்
தடியாலடித்தார்கள் தண்டனையும் செய்தார்கள்
துடியாய் துடித்திடவே தொண்டர்களை வாட்டினார்கள்
இப்படி இன்னும்பல இம்சைசெய்தும் மக்களெங்கும்
அப்பொழுது சைமன் கமிஷன் அகல எதிர்த்தார்கள்
பாஞ்சாலசிங்கமென்னும் பழுதில்லா நம்தலைவர்
லாலாலஜபதிராய் நன்கெதிர்த்து நின்றனரே
வாய்ப்பிரசங்கம் செய்து வந்ததொடு சைமன்கமிஷன்
ஊர்வலத்திலும் சென்று உகந்தெதிர்த்து நின்றனரே

போலீஸ்த்தடியடியைப் பொருட்படுத்தாமலன்று
நேரில் நின்று லஜபதிராய் நிமிர்ந்தெதிர்த்து வந்தனராம்
தடியாலடித்துநின்ற ஜனங்களைக் கலைத்த போலீஸ்
மடையன் எவனோயிவர் மார்பில் அடித்தனனும்
இந்த அடியினாலே எந்தைலஜபதிராய்
அன்று சிலநாள் வருந்தி ஆவி துறந்தனராம்
வந்த சைமன் கமிஷன் வகையெதுவுஞ்செய்யாது
சென்றதுவாம் வந்ததுபோல் சீமைதனைத்தேடி
லாலாலஜபதிராய் நல்லுயிர் நீத்த செய்தி
ஞாலமெங்கும் ஓங்கிடவே நடுங்கினரே மக்களெல்லாம்
காந்திமகானும் கவலை மிகப்பெருகி
சாந்தமிகுந்திடவே ஜனங்களையுந் தேற்றிவந்தார்
மக்களுந்தலைவர்களும் மயங்கிவரும்நாளையிலே
தக்கவழி கிட்டாது தயங்கி வரும் நாளையிலே
ஆயிரத்துதொளாயிரத்துஇருபத்து ஒன்பதிலே
மாட்சிமைசேர் மோதிலால்நேர் மகிபன் தலைமையிலே
காளிக்கட்டம் என்று சொல்லும் கல்கத்தாமாநகரில்
கூடிய காங்கிரசில் குறித்தனரே தீர்மானம்
இந்தியா தேசத்திற்கு எப்படியுஞ் சுய ஆட்சி
தந்துவிடவேண்டுமென்று தயாரித்தார் தீர்மானம்
இந்த நல்லதீர்மானத்தை இங்கிலீஷரசாங்கத்திற்கு
அந்தமிகுந்திடவே அன்று அறிவித்தனரே
இந்தவிதம் கல்கத்தாவில் இயற்றிய தீர்மானமதை
அன்றறிந்த காந்திமகான் அதிகஉற்சாகங்கொண்டு
காங்கிரசை விட்டுச் சில காலம் பிரிந்துவந்த
பாங்கொழித்துத்தொண்டுசெய்யப்பழயபடி சேர்ந்துநின்று
செய்த தீர்மானமிதைத் தீரத்தெரிந்தறிந்து
உய்யும் சுதந்திரத்தை உகந்தளிக்கவேண்டுமென்றார்



காந்திமகானும் தொண்டர்களும், தண்டி உப்பளம் செல்லுதல்.

கவனமொடு தீர்மானத்தைக் கொண்டு பதில் கொடுக்க
தவணை ஒரு வருடம் தந்தனரே சர்க்காருக்கு
கல்கத்தாத் தீர்மானப்படி கட்டாயம் சுதந்திரத்தை
நல்காவிடில் நேரடி யாம் நடபடிக்கை யாகுமென்றார்
காங்கிரஸ் நடபடிக்கை கலங்காதெடுக்குமதை
தாங்குதற்கு இப்பொழுதே தயாராகிக் கொள்ளுமென்றார்
இன்னும் பல விதமாய் எச்சரிக்கை செய்துமேதான்
அன்று வெள்ளைச் சர்க்காருக்கு அறிக்கையிட்டார் காந்திஜி
வைசிராயாய் அப்பொழுது வந்திருந்த இர்வின்துரை [யும்
செய்யும் வழி தோன்றாது திகைத்து நடுநடுங்கி
காந்தி மகான் அறிக்கைகளைக் கண்டு மிகப்பதறி
சாந்தமொடு அதற்குத் தகுந்தவைகள் நன்கறிய
எண்ணியே இர்வின் துரை இங்கிலாந்து தேசம் சென்று
கண்ணியஞ்சேர் பார்லிமெண்டில் கலந்து தெரிந்துவந்து
இந்தியர் சுதந்திரத்திற் கின்னும் லாயக்கில்லையென்று
அன்று அறிவித்து விட்டு ஆனவைகள் செய்தனரே
இதையறிந்த காந்திமகான் என்ன இனிச்செய்வதென்று
சபர்மதி ஆச்சிரமந் தன்னில் கமிட்டி கூட்டி
பரிபூர்ண சுயராஜ்யம் பக்குவமாயடைய
சரியாகச் சட்டமெல்லாம் தகர்த்தெரியவேண்டுமென்று
எண்ணித் தீர்மானஞ் செய்து ஏற்றவைகள் செய்வதற்கு
கண்ணியமாய் நன்னாளைக் கருதி யெதிர் பார்த்திருந்தார்

---

## உப்புச் சத்தியாக்கிரஹம்

ஆயுத பலங்கொண்டு அரசாட்சி செய்து வந்த
மாபெரிய பிரிட்டிஷை மனோபல சக்தியினால்
எப்படியும் ஹிம்சையின்றி இழுத்துச் சுகந்திரத்தை
பெற்றுவிட லாமென்ற பெருமை கொண்ட காந்திமகான்
சட்ட மறுப்பென்றும் சத்தியாக்கிரக மென்றும்
திட்டப்படி கிளர்ச்சி செய்து வரும் நாளையிலே
உப்பில்லாப் பண்டம் குப்பையிலே யென்பார்கள்
எப்பொழுதும் உப்பின்றி எவருமுண்ண இயலாது
ஏழை பணக்காரர் எல்லோரும் இவ்வுலகில்
வாழ அவசியமாய் வாய்த்த பொருள் உப்பாகும்
அவ்வளவு முக்கியமாய் அமைந்த ஒரு உப்பினுக்கு
எவ்வளவோ வேண்டியதாய் இருக்குமொரு உப்பினுக்கு
எந்நாட்டிலும் வரிதான் இல்லாதிருக்கையிலே
இந்நாட்டிலே மட்டும் இயற்றி வந்தார் உப்பு வரி
அந்த வரியை அடியோடகற்றுதற்கு
எந்தை மகாத்துமாவும் எண்ணி மனந்துணிந்தார்
ஆயிரத்து தொளாயிரத்து முப்பதிலே தண்டி யென்னும்
தூய நல்ல க்ஷேத்திரத்தில் துடங்கினார் சத்யாக்கிரகம்
தடியூன்றிக் காந்திமகான் தண்டியுப்பளம் நோக்கி
பிடியுப்பு அள்ளுவதற்கு பிரயாணமானாரே
சட்டத்தை மீறியல்லோ சர்க்காரின் உப்பையள்ள
திட்டப்படி சென்றனரே தேசமக்கள் சூழ்ந்துவர
கால்நடையாய் ஊர்கள்பல கண்டு கடந்துசில
நாள் நடந்து சென்றனரே நானிலத்தோர் நன்கறிய

இப்பரதகண்டத்திலே ஏற்படுத்தி வைத்திருக்கும்
உப்புவரி நீக்காது உறங்காது சென்றனரே
எடுத்தயிதில் வெற்றியின்றேல் என்னரிய நல்லுடலும்
சமுத்திரத்தில் மிதக்குமென்று சபதம்கூறிச் சென்றனரே
காந்திமகான் கால்நடையாய் கனிந்து அளஞ்சென்றிடவே
மாந்தரெல்லாம் பின்துடர்ந்து மகிழ்ச்சியுடன் சென்றனரே
லக்ஷக்கணக்கான ராணுவங்கள் சூழ்ந்திருக்க
அச்சமின்றிச்சென்றனரே அளத்திலுப்பு அள்ளுதற்கு
உப்பளத்திலே புகுந்து ஒருபிடி உப்புக்கையில்
அப்பொழுது அள்ளினரே ஹரிராமாகிருஷ்ணவென்று
காந்திமகான் அஞ்சாது கையிலுப்பு அள்ளிடவே
மாந்தரெல்லாம் கூடிவந்து மயங்காது அள்ளினரே
இமயமுதல் கன்னிவரை இருக்கும் ஜனங்களெல்லாம்
அமையாது அங்கங்கே அள்ளினரே உப்புகளை
எங்கெங்கே உப்பளங்கள் இருந்ததோ இந்நாட்டில்
அங்கெல்லாம் மக்கள் கூடி அள்ளினரே உப்புகளை
உப்பளங்கள் எட்டாத ஊரிலுள்ள மக்களெல்லாம்
கொப்பரையில் உப்புநீரை கொதிக்கவைத்து உப்பெடுத்தார்
அணியணியாய்தொண்டர்படைஅளத்தில் உப்பள்ளிடவே
துணிவுகொண்டு மக்களெங்கும் துடர்ந்து உப்புவாரினர்கள்
இவ்வாறு தேசமெங்கும் இறங்கிடவே உப்பளத்தில்
ஒவ்வாது சர்க்காரும் உடனே கிளம்பினர்கள்
தரைப்படை குதிரைப்படை தாக்கும் சக்திவாய்ந்தபல
விதப்படைகளெங்கினுமே விரைந்து வந்து சேர்ந்ததுவே
ஊர்த்தலையாரிமுதல் உத்தியோகம் செய்பவரெல்லாம்
வேர்த்து விருவிருக்க வெளிக்கிளம்பலானரே
காந்திமகானைப்பிடித்து கைதிசெய்து ஆங்கவரை [ருர்
சேர்ந்துநின்ற தொண்டரையும் சிறைச்சாலைகொண்டுசென்

உப்பளம் தொண்டர்களை ஓடிஓடித்தாக்கினார்கள்
செப்பமுடியாதவாறு ஜெயிலிலும் சேர்த்தார்கள்
உள்ளஜெயில் காணமல் உடனே புதுஜெயில்கள்
நள்ளிரவே தானமைத்து நன்கடைத்தார் தொண்டர்களை
எவ்வளவு தானடைத்தும் இரங்காது தொண்டர்கூட்டம்
மென்மேலும் ஓடிவந்து மிகுந்து குவிந்திதுவே
கையில் எடுத்த உப்பை கழுத்தையறுத்தாலும்
அய்யோ ஒருசிறிதும் அகலவிடமாட்டார்கள்
மண்டையுடைந்தாலும் மன்னுமுயிர் போனாலும்
கொண்டபிடி உப்பதனைக்கொடுக்கவே மாட்டார்கள்
இப்படிச்சத்தியாக்கிரகம் எங்கும் வலுத்துவிட்டதினால்
உப்பள்ளும் தொண்டர்களை உதைத்து மிகவருத்தி
லாரிகளில் ஏற்றி நடுக்காட்டில் கொண்டுவிட்டு
யாருமறியாதவாறு அவஸ்தைப்படுத்தினார்கள்
மேலும்மேலும்வந்துசேரும்மேன்மையுள்ள தொண்டருக்கு
சோறுகிடைக்காதவாறு தொல்லைபல செய்தார்கள்
ஹோட்டல்களில் தொண்டருக்கு ஓருபிடிசோறேனும்
போட்டாலபராதமென்று புரட்டியடித்தார்கள்
என்னதான் செய்தாலும் எள்ளவும் குன்ருது
முன்னிலும் பன்மடங்கு மூண்டது சத்தியாக்கிரகம்
அர்த்தமின்றிப் புளியை ஆற்றில் கரைத்ததுபோல்
எடுத்தவடக்குமுறை எல்லாவீணாயிடவே
அன்றுமே வைசிராயாய் அமர்ந்திருந்த இர்வின்துரை
ஒன்றும் புரியாது உரைத்தாரே சீமைக்கு
காந்திஎன்றால் இந்தியாவில் கருவிலுள்ள சிசுவும்
சாந்தமொடு ஆர்ப்பாட்டம் தானே புரியுதுகாண்
ஆகையினால் காந்திமகான் அபிப்பிராயம்போன்றவொரு
ஞாயம் வழங்காவிடிலோ நாமிருக்கயேலாது

இந்தமொழி கேட்டதுமே ஏக்கமுற்ற பார்லிமெண்டும்
நன்று நன்று ஆனமட்டும் நடந்துகொள்ளுமென்றதினல்
காந்திஜியை விடுவித்து கண்யமிக்க இர்வின்துரை
சாந்தமுறும் உடன்படிக்கை தானும் செய்துகொண்டனரே
அடைபட்ட தொண்டரெல்லாம் அன்றுவெளியானதுடன்
தலைச்சுமை உப்பெவரும் தயாரிக்கச் சட்டமாச்சு
கள்ளுச்சாராயக்கடை கஞ்சா அபின் பீருக்கடை
வெள்ளைச் சீமைத்துணிகள் விற்கும் ஜவுளிக்கடை
இந்தக்கடைகளெல்லாம் இருந்து மறியல் செய்ய
தந்தார் சிலவிதிகள் சாத்வீகத் தொண்டருக்கு
அந்த விதிப்படியே அணிவகுத்து தொண்டர்களும்
சொந்தமெனச் செய்துவந்தார் துடர்ந்து மறியலையும்
இப்படியாகவெங்கும் இனிய சுதந்திரத்தின்
செப்பரிய சேவைகளும் சிறந்து வளர்ந்ததுவே

---

## வட்ட மேஜை மகாநாடு.

---

சுதந்திரதாகங்கொண்டு துடிக்குமிந்து தேசத்திற்கு
இதந்தர ஏதேனும் இயற்றவேண்டுமென்றெண்ணி
எப்பொழுதுமே கிளர்ச்சி எழுப்பாதிருப்பதற்கு
நற்பதவி இந்தியர்க்கு நல்கவேண்டுமென்றெண்ணி
அதற்குரிய நல்வழியை அறிந் தொழுங்கு செய்வதற்கு
துரைத்தனத் தாருமன்று துடங்கிஞரே கூட்டமொன்று
வானுலகம் போலிலங்கும் வன்மை மிகுந்த லண்டன்
மாநகரில் வட்டமேஜை மகாநாடு கூட்டிஞரே
இந்நாட்டிலுள்ளபல இயக்கத்தலைவர்களும்
அந்நாளில் அங்குவர அழைத்தாரே சர்க்காரும்

உண்மையிலே நாட்டினுக்கு உழைத்து வரும்காங்கிரசும்
நன்மைகிடைக்காதென்று நவின்றுவிட்டு நின்றதுவே
காங்கிரஸ் பிரதிநிதி காந்திமகானுமப்போ
பாங்குடன் எழுதித்தந்தால் பயணப்படலாமென்றார்
கண்யமுள்ள காங்கிரசு கருதும் பல திட்டங்களை
வன்மைபெறசெய்வோமென்ற வாக்குறுதி வேண்டுமென்றார்
இன்றெமக்கு வாக்குறுதி எழுதித்தருவீரானால்
சென்றிடலாம் சீமையென்று தெரிவித்தார் காந்திமகான்
காரியக்கமிட்டியிலே கனிந்து செய்த தீர்மானத்தை
மீறியொருக்காலும் மேனாடு செல்லேனென்றார்
இந்தவிதம் காந்திமகான் இணங்காது கூறிடவே
மந்தமுள்ளசர்க்காரும் மயங்காது தான் துணிந்து
நாற்பதுகோடிமக்கள் நலன் காணும் காங்கிரசின்
மாபெரிய பிரதிநிதி மகாத்துமாவையுவிட்டு
மக்களுக்குவேண்டாத மற்றுந்தலைவர்களை
பக்குவமாய் லண்டனுக்குப் பரிந்து அழைத்திடவே
அரசாட்சி செய்பவரின் அரியபல சூழ்ச்சிகளின்
கருத்தறிய வொண்ணாத கட்சித்தலைவர்களும்
சீமைபோககிட்டுவதே தெய்வச்செயல் என்றதனைச்
தாகமுடன் நோக்கி நின்ற தாசானு தாசர்களும்
இப்படிப்பட்டிருந்த இன்னுஞ் சிலபேரும்
அப்பொழுது சர்க்காரின் அழைப்புக்கிணங்கியேதான்
தேசமக்கள் நன்மைக்கெனச் சிறப்பாய் நடக்குவட்ட
மேஜை மகாநாட்டினுக்கு மேன்மையுடன் சென்றார்கள்
இந்தியத்தலைவரென்று இங்கிலாந்து வந்தவரை
பந்தமுள்ள பார்லிமெண்டும் பார்த்துமனம் பற்றாமல்
இங்கிவரைக்கொண்டு நாமும் இந்தியர்க்கு வேண்டியதை
நன்குபெறச்செய்தாலும் நம்பாது இவ்வுலகம்

காசினியிலேசிறந்த காந்திமகான் அங்கிருக்க
பேசுமிவர் வந்ததினுல் பிரயோஜனமாகாது
என்று சொல்லி வந்திருந்த இந்தியர்கள் யாவரையும்
சென்றுவாருமென்று சொல்லி திருப்பிவிட்டார் இந்நாடு
வட்டமேஜை மகாநாடும் வழகுளாவாகிடவே
திட்டமிட்டு வந்தவர்கள் சீமை சுற்றலானுர்கள்
தாய்நாட்டிற்குஞ் சிலபேர் தானே திரும்பினுர்கள்
மாயமகாநாடும் மறைந்தொழிந்து நின்றதுவே

---

## இரண்டாவது வட்டமேஜை மகாநாடு
### காந்திமகான் இங்கிலாந்து சென்றது-

---

இந்தியக் காங்கிரசும் இசைந்து வராததினுல்
மூந்திய மகாநாடும் முடியாது நின்றிடவே
காந்திமகான் கேட்டபடி கட்டுப்பட்டுமேயவரை
பாந்தமுடனேயழைக்கப் பார்லிமெண்டும் சம்மதித்து
திட்டம் தயாரிக்கவே திரும்ப இரண்டாவது
வட்டமேஜை மகாநாட்டை வலியவந்து கூட்டினுரே
காந்திமகான் இஷ்டப்படி கையெழுத்துபோட்டவரை
கூட்டி உடன் அனுப்ப கூறினுரே வைசிராய்க்கு
வைசிராயா அன்றிருந்த வில்லிங்டன் மாதுரையும்
மெய்நடுங்கி வாய்குளறி மேனி சிலுசிலிர்த்து
காந்திமகானைத்தேடி கடுகியே ஓடிவந்து
சாந்தமொடு வேண்டுஞ் சமாதானமுஞ்செய்து
வாக்குறுதி கேட்டபடி வலிய எழுதித்தந்து
சீக்கிரம் சீமைசெல்லத் தெரிவித்துவேண்டி நின்ருர்

காந்திமகானும் கருத்திசைய அன்றவரை
பாந்தமுள்ள வைசிராயும் பம்பாய்க்கு கூட்டிவந்து
'ராஜபுதானு' என்னும் நல்லதனிக்கப்பலிலே
நேசமுடன் லண்டனுக்கு நேரே அனுப்பிவைத்தார்
தேவிசரோஜினியும் செய்ய மதன்மோகன்
மாளவியாவும் வர மகாத்மா பயணமானுர்
எங்கும் ஜனங்கள் இறைஞ்சி வழியனுப்ப
பங்கமில்லாக் காந்திமகான் பரிந்து சென்ருர் லண்டனுக்கு
உலகிலுள்ள மக்களெல்லாம் ஒருமுகமாக நோக்கிநிற்க
கருணைமிகுங் காந்திமகான் கப்பலிலே சென்ருரே
கப்பலிலே செல்லுகின்ற காலத்திலே காந்திமகான்
ஒப்பரிய சிறுவருடன் ஓடி விளையாடுவராம்
உற்றவேலைசெய்வதற்கு உரிய நேரந்தவிர
மற்றநேரம் சிறுவருடன் மகிழ்ந்து விளையாடுவாராம்
திரிப்திரிப்பம்பக்காயும் சிறந்த கண்ணுமூச்சியும்
கொடுக்குப்பிடியாட்டமும் கூடிவிளையாடுவாராம்
எல்லாந்தெரிந்திருந்தும் எதுந்தெரியாதவர் போல்
நல்லாச்சிறுவருடன் நயந்து விளையாடி வந்தார்
இப்படியே கப்பலிலே இருக்கும்வரைக் காந்திமகான்
ஒப்பரியபாலருடன் உகந்து விளையாடி வந்தார்
ஏடனென்னும் ஊரினிலும் இட்டாலி தேசத்திலும்
ஓடுங்கடல் மார்க்கத்திலே உள்ளபல நாட்டினிலும்
இருந்த பெருந்தலைவர் எல்லோரும் காந்திஜியை
வருந்திவரவேற்று வாழ்த்தியனுப்பினுர்கள்
எல்லா வரவேற்பும் ஏற்றுக்கொண்டு காந்திமகான்
வெள்ளையர் வாழ்இங்கிலாந்து விரைந்துவந்து சேர்ந்தாரே
லண்டன் நகர்தனிலே நல்லமகான் காந்திஜியை
கண்டுதரிசிக்க வந்தோர் கணக்கிலடங்காது

எள்ளுவிழ இடமின்றி எங்கும் பெருங்கூட்டம்
கள்ளமில்லாக்காந்திஜியைக் காணவந்து கூடியதே
வெள்ளைப்பார்லிமெண்டிலும் வேறுபலவிடத்தும்
நல்லவிருந்துகளும் நடந்ததுவே காந்திஜிக்கு
தன்னயமில்லாத சாந்தமகான் காந்திஜிக்கு
மன்னர் பிரானும் மகிழ்ந்து விருந்தளித்தார்
சூரியன் அஸ்தமிக்கா தோங்கும் சாம்ராஜ்யத்தின்
சீரிய சக்ரவர்த்தி சிறந்து விருந்தளித்தார்
எல்லா விருந்துகளும் இனிது முடிந்த பின்பு
பல்லோர்சூழ் வட்டமேஜை மகாநாடு வந்தமர்ந்தார்
அந்த மகாநாட்டினிலே ஆங்கிலேயர் தந்திரத்தால்
இந்தியர்க்குள் பேதம்பல ஏற்படவும் செய்ததினால்
ராஜாக்கள் கட்சி வேறு நண்ணும் முஸ்லீம் கட்சிவேறு
தேசத்திலே கீழான தீண்டாதார் கட்சி வேறு
இப்படியாகப் பல இடைஞ்சல்கள் வந்திடவே
ஒப்பரிய மகாநாடும் ஒருவாறு தீர்ந்த தன்றே
தீண்டாமை தான் நமக்கு தீங்காக வந்ததென்று
ஆண்டறிந்த காந்தி மகான் அதையொழிக்கச் சித்தமானார்
சித்தங்கொண்டு இங்கிலாந்து தேசம் விட்டு தாய்நாடு
கத்துங்கடல் மார்க்கமாக காந்தி மகான் வந்துசேர்ந்தார்

---

## காந்தி மகானைக் கைதி செய்து தொண்டர்களையும் சிறைப்படுத்தி காங்கிரசை அடக்கியது.

---

இங்கிலாந்திலே யிருந்து இந்தியா வந்ததுமே
பங்கமில்லாக் காந்திஜியைப் பதருது கைதி செய்தார்
அன்று மிகப்பணிந்து அனுப்பி வைத்த வைசிராயும்
இன்று மகாத்மாவை எண்ணுது கைதி செய்தார்
மன்னர் பிரான் வேண்டி மகிழ்ந்து விருந்தளித்த
தன் நிகரில்லாதவரைத் தைரியமாய்க் கைதி செய்தார்
திக்கெங்கும் தொண்டர்களைத் தேடிப் பிடித்துதைத்து
தக்க ஜயில்களிலே தள்ளி வதைத்தார்கள்
ஆட்சி செய்யும் வெள்ளையரின் அந்தரங்கமான பல
சூழ்ச்சி தெரியாமல் துடித்தாரே மக்களெங்கும்
மண்டையுடையும்படி மளுக்குந் தடியடியும்
கண்ட விடங்களெல்லாம் கரைபுரண்டு நின்றதுவே
மக்களும் தொண்டர்களும் மதிமயங்கி மீளுதற்கு
தக்க வழிதோன்ருது தவிக்கவடித்தார்கள்
எங்கும் பெரும்பீதி ஏற்படவே நாட்டிலுள்ளோர்
அங்கங்கே தானடங்கி அயர்ந்துவரலானுர்கள்
இர்வின் துரை காலத்திலே இருந்த ஒழுங்கான
தர்ம அடக்குமுறை தன்னை நினைத்தார்கள் [துரை
ஜெயிலிலே மோருஞ்சோறும் செழிக்கவைத்தார் இர்வின்
வெயிலிலே சோர்ந்து விழ வில்லிங்டன் செய்து வந்தார்
மாமனுர் வீடுசென்ற மாப்பிள்ளைபோல் தொண்டர்களும்
சேமமாய்ச் ஜெயிலை விட்டுத் திரும்பிவந்தாரப்போது
வில்லிங்டன் காலத்திலே விரும்பிச் ஜெயில் போனவர்கள்
புல்தடுக்கப் பொருக்கா பொம்மைகள் போலானுர்கள்

அவ்வளவு ஹிம்சை செய்து அடக்கியொடிக்கிடவே
ஒவ்வாது மக்களெங்கும் ஒதுங்கிப்பதுங்கி நின்றார்
பட்டம் பதவிபெரும் பசப்பு வார்த்தைக்காரரெல்லாம்
எட்டிநின்று காங்கிரசை எள்ளி நகையாடினூர்கள்
ராஜாதி ராஜர்களும் நல்லபணக்காரர்களும்
கூசாது காங்கிரசின் கொட்டம் அடங்கிற்றென்றார்
இந்நாட்டில் காங்கிரசு என்ற பெயரேயினிமேல்
எந்நாளும் இல்லையென எக்காளம் பேசினூர்கள்
சோத்துக்கலந்தலைந்த தொண்டரெல்லாம் போனதினூல்
சாத்வீகக் காந்திமகான் ஜம்பமினிச் செல்லாதென்றார்
இப்படிக் கொஞ்சக்காலம் இருந்திடவே சர்க்காரும்
எப்படியும் இந்தியர்க்கு ஏற்றசில சீர்திருத்தம்
செய்யவேண்டுமென்றெண்ணிசிறைசென்றதொண்டரை
துய்ய மகாத்மாவையும் துணிந்து விடுதலைசெய்தார் [யும்

---

## காங்கிரஸ் பதவி பெற்றது.

---

ஆயிரத்துத்தொளாயிரத்துமுப்பத்துஆறதிலே
மாபிரியத்தோடு தந்தார் மக்களுக்கு வாக்குரிமை
பணக்காரர் ஏழையென்ற பாரபட்சமில்லாது
இணக்கமொடு ஓட்டுரிமை எல்லோர்க்கும் தந்தார்கள்
ஓட்டதிகம் பெற்றவரே ஓங்கும் பதவிபெற்று
நாட்டினதிகாரமெல்லாம் நடத்தி வரலாமென்றார்
இவ்வழியில் காங்கிரசும் ஈடுபட எண்ணிடவே
ஒவ்வாது காந்திமகான் உரைப்பார் மனம்வருந்தி
சுதந்திரம் வாங்காது துணிந்து பதவி கொண்டால்
இதம்பெறலாமென்று எண்ண என்ன ஞாயமுண்டு?

ஒத்துழையாமை என்னும் உறுதிகொண்டோர்சர்க்காருடன்
ஒத்துழைக்கப் பதவி கொண்டால்உலகமென்ன சொல்லாது
என்ற மொழிகேட்டு இருந்த தலைவரெல்லாம்
இன்று பதவி கொள்ளல் ஏற்றதென்று கூறினார்கள்
சில்லரைக்கட்சியெல்லாம் சிதறி விழுந்தோடிடவே
அல்லலின்றிப் பதவி கொள்ளல் அவசியம் என்றார்கள்
பணக்காரக் கட்சியெல்லாம் பதறி விழுந்தோடுதற்கு
சுணக்கமின்றிக் காங்கிரசும் துணியவேண்டும் பதவியிலே
சர்க்கார் பதவியெல்லாம் தயங்காது நாமடைந்தால்
நற்காரியமனைத்தும் நன்கு செய்ய லாயக்கென்றார்
இப்படித்தலைவரெல்லாம் இயம்பிடவே காந்திஜியும்
ஒப்பி மனமிசைந்து ஒருவாறு சம்மதித்தார்
எந்த வழியேனும் இனிய சுதந்திரமும்
வந்துவிடுவதற்கு வகை செய்தால் போதுமென்றார்
காந்திமகானும் கருத்திசையக் காங்கிரசும்
வேண்டும் பதவி கொள்ள விரைந்தொழுங்கு செய்ததுவே
ஜில்லாச் சபைமுதலாய் சிறந்த சட்டசபைவரையும்
எல்லா எலக்ஷனிலும் இறங்கி விடலானார்கள்
தேசமெங்கும் சட்டசபைத்தேர்தல் நடக்கையிலே
ஆசையொடு காங்கிரசு ஆபேட்சகரைப் போட்டார்கள்
இமயமுதல் கன்னி வரை இருக்கும் இடங்களெல்லாம்
அமைதியொடு காங்கிரசு அபேட்சகரைப்போட்டார்கள்
இந்துமுசல்மான்கள் ஏற்றகிறிஸ்தவர்கள்
இந்தவிதமாக இருந்த தொகுதியெல்லாம்
காங்கிரஸ் அபேட்சகரைக் கண்ணியமாக நிறுத்தி
பாங்காக ஓட்டளிக்க பகர்ந்தாரே மக்களுக்கு
பணக்காரக் கும்பல்களும் பதவிவேட்டைக்காரர்களும்
இணங்காது எவ்விடத்தும் எதிர்த்தாரே காங்கிரசை

ராஜா ஜமீன்தார் நல்ல பணத்திமிரார்
கூசாது ரூபாய்களை கொட்டினாரே ஓட்டளிக்க
அதிகாரம் செய்தும் அதிகச்சிபார்சு செய்தும்
சதி செய்தும் வந்தார்கள் தக்க பணங்கொடுத்தும்
இல்லாத மக்களுக்கு ஏற்றதெல்லாங் கொடுத்து
எல்லா இடங்களிலும் எதிர்த்தாரே காங்கிரசை
காசு சிறிதுமில்லாக் காங்கிரஸ் அபேட்சகரும்
பேசிவந்தார் தாய்நாட்டைப் பெருமைபடச்செய்யுமென்று
காலமெல்லாம் ஜெயிலில் கஷ்டப்பட்ட காங்கிரசு
சீலருக்கே வாக்குரிமை சீட்டையளிப்பீரென்றார்
காருமில்லை சோருமில்லை கால்நடையாகவந்து
தேருதலில் காங்கிரசிற்கு சீட்டுப்போடவேண்டுமென்றார்
இந்தவிதமாக எங்கும் பெருங்கிளர்ச்சி
அந்தநாள் நாட்டினிலே அதிகரித்து வந்ததுவே
சர்க்கார் ஜமீன்தார் தக்க பணக்காரர்
மிக்கபெருமையுடன் விளங்கிவந்தோரெல்லோரும்
சோத்துக்கலந்தலையும் தொண்டருள்ள காங்கிரசு
ஓட்டுப்பெருதென்று உல்லாசம் பேசிவந்தார்
பேர்பெற்றோரை எதிர்த்துப் பிச்சைக்கார காங்கிரசு
சீரழியப் போரதென்று சிரித்துமே வந்தார்கள்
எங்கும் பணக்காரர் ஏற்றபல காருகளில்
தங்குதடையின்றித் தக்கபிரச்சாரம் செய்தார்
இவ்வாறு காங்கிரசை எங்கும் பணத்திமிரோர்
வெவ்வேறு கட்சிசொல்லி வெகுவாய் எதிர்த்தார்கள்
தேர்தல் நாள் வந்ததுமே சீட்டுப்போடப் பணக்காரர்
கார்களிலே மக்களெங்கும் கனிந்து வந்து கூடினார்கள்
காங்கிரசுக்கான பெட்டி கண்ய மஞ்சள் பெட்டியும்
பாங்கறியாக் கட்சிகளின் பலவர்ணப் பெட்டிகளும்

ஒக்க இருந்திடவே ஓட்டளிக்கும் அந்நாளில்
மக்கள் தனித்தனியே மறைந்து சீட்டுப்போட்டுவந்தார்
இவ்வாறிலக்கிஷனும் எங்கும் முடிவான பின்னர் [டவே
வெவ்வேறு பெட்டிச் சீட்டை விரைந்து எண்ணிபார்த்தி
எங்குமே மஞ்சள் பெட்டி இனிது நிறம்பிநிற்க
பங்கமுள்ள பெட்டியெல்லாம் பாழடைந்து போனதுவே
தேசமெங்கும் காங்கிரசே சிறந்தவெற்றி பெற்றிடவும்
ஆசைகொண்ட கட்சியெல்லாம் அடியோடழிந்ததுவே
பிச்சைக்கார கட்சியென்று பேசிப்பெருமைகொண்ட
லக்ஷப்பிரபெல்லோரும் பிச்சைக்காரரானுர்கள்
ராஜாக்கள் பணக்காரர் நல்ல ஜமீன்தார்கள்
மோசமிகவடைந்து மூலேயிலே போய்ச் சேர்ந்தார்
இமயமுதல் கன்னிவரை எல்லா இடங்களிலும்
அமையாது காங்கிரசே அமோக வெற்றி பெற்றதினுல்
மக்களெல்லாம் காங்கிரசை மதிக்கிருரென்பதனே
தக்கபடி சர்க்காரும் தானறிந்து கொண்டார்கள்
காங்கிரஸ் அடங்கிற்றெனக் கர்வங்கொண்ட வைசிராயும்
ஏங்கி மனங்கலங்கி எண்ணம் பலவாகி நின்ருர்
காந்திமகானின் கருணேப்பிரதாபத்தினுல்
சாந்தமிகுங் காங்கிரசும் தான் பதவிகொண்டதுவே
ஓயாது மக்களுக்கு உழைத்து ஜெயில் சென்றவர்கள்
மாகாணமெங்கினுமே மந்திரிமாரானுர்கள்
சென்னே மாகாணத்திற்குச் சிறந்த நம் ராஜாஜி
வின்னமிலாதன்று விளங்கினுர் மந்திரியாய்
இந்தவிதம் காங்கிரசும் இந்தியாவெங்கினுமே
மந்திரிப் பதவிபெற்று மகிமையொடு நின்றதுவே
அன்புமிகுங் காந்திமகான் ஆக்ஞைப்படி மந்திரிமார்
இன்பமிகும் நல்வழியில் இரங்கி வேலே செய்தார்கள்

## இரண்டாவது உலக மகாயுத்தம்.

பல்வழியில் கஷ்டப்பட்டுபதவி சிறிது பெற்று
நல்ல வருடம் ரெண்டு நடந்து வரும் நாளையிலே
ஆயிரத்துத்தொளாயிரத்து முப்பத்துஒன்பதிலே
மாபெரிய உலக மகா யுத்தம் வந்து சேர்ந்ததுவே
அடிமைப்பதவி பெற்று அரசாட்சி செய்கையிலே
கொடுமை மிகுந்த யுத்தம் கொந்தளித்து வந்ததுவே
முன் நடந்த சண்டையிலே முறியடிக்கப்பட்டவர்கள்
பின்னும் பலம் பெற்று பெரிய சண்டை செய்தார்கள்
குன்றாத வீரமுள்ள கொடிய ஜெர்மானியரும்
என்றுமே கண்டிராத இடிக்கிப்போர் செய்தார்கள்
ஹிட்லர் எனுங்கொடியோன் இரக்கமின்றி எவ்விடத்தும்
திட்டப்படி நாடுகளைச் சிதறடித்து வந்தானே
முந்திய யுத்தத்திலே முக்கியமாய் ஆண்களெல்லாம்
சென்றிறந்து போனதினால் திரும்பவும் சண்டைசெய்ய
ஆணதிகம் வேண்டுமென ஐநான்கு ஆண்டுகளாய்
வேணபல சட்டம் போட்டு விருத்தி செய்தான் வீரர்களை
எந்த ஒரு ஆடவனும் இயன்றவரை எட்டுப்பெண்ணை
சொந்தமாகத் தாலிகட்டி சுகித்துப் பிள்ளையாக்குமென்றான்
எட்டுக்குமேல்பெண்ணதிகம்இஷ்டம்போல கட்டுவோர்க்கு
பட்டம் பதவியுடன் பரிசுகளும் தந்து வந்தான்
கண்டவுடன் காமக் கவர்ச்சிதரும் நற்சிலைகள்
எந்த இடங்களிலும் இருக்கும்படி செய்து வைத்தான்
பிள்ளையிலே ஆணதிகம் பிறப்பதற்கு ஏற்றபல
கொள்கையுள்ளபுஸ்தகங்கள்குவித்துவந்தான் தேசமெங்கும்

இப்படி ஜெர்மனியில் இருபது ஆண்டினுக்குள்
ஒப்பரிய வீரர்களை உற்பத்தி செய்துவிட்டான்
பத்து வருஷத்திலே பலத்தபல திட்டம் போட்டு
எத்திசையும் காணாத யந்திரங்கள் செய்துவிட்டான்
சமுத்திரம் ஆகாயம் தரை முதலாய் எவ்விடமும்
இமைப்பொழுதில் தூளாக்கும்யந்திரங்கள்செய்துவிட்டான்
ஆயுதமும் வீரர்களும் அதிகரித்து விட்டதினால்
மாபெரிய யுத்தமதை மண்டலத்தில் ஆரம்பித்தான்
ஹிட்லர் என்றால் இவ்வுலகில் எங்கும் நடுநடுங்க
மட்டுமரியாதையின்றி மடியவைத்தான் மக்களையும்
ஐரோப்பிய நாடெல்லாம் அலங்கோலமாகிடவே
செய்யாத போர்கள் செய்து திணற வைத்தான் மக்களையும்
அலையலையா விமானங்களும் ஆங்கிலேயர் இங்கிலாந்து
நிலைகுலையக் குண்டுகளை நிதமுஞ்சென்று வீசினதே
சமுத்திரத்திலே மூழ்கி டார்பிடோக்குண்டு போட்டு
அமிழ்த்தி வந்தார் லக்ஷக்கணக்கான பெருங்கப்பல்களை
ஓடுகின்ற கப்பல்களை ஓடியிழுத்துடைக்கும்
ஆடுங்கடற்கண்ணிகளை அலைகடற்குள் போட்டுவைத்தார்
இரவுபகலில்லாது எப்பொழுதும் குண்டுவெடி
சரமாரியாய்ப் பொழிந்து தகர்த்து வந்தார் நாடுகளை
ராக்ஷசபீரங்கியும் நல்ல பெரும் டாங்குகளும்
காச்சணத்தில் தூளாக்கும் கவசவெடிக்காருகளும்
வீவொன்று ரெண்டென்று விநாடியில் பாதாளம் வரை
தாவித் தகர்த்து வரும் தக்கபல ஆயுதமும்
நன்றுதீதெண்ணாது நடத்தியெங்கும் நாசமாக
அன்று நடந்து வந்த அரிய பெரும்போரதிலே
இந்தியரும் வெள்ளையர்க்கு ஏற்ற பெரும் ஒத்தாசை
தந்துதவ வேண்டுமெனச் சர்க்காரும் கேட்டனரே

இப்பெரிய யுத்தத்திலே இங்கிலாந்திற் கிந்தியரும்
ஒப்பரிய ஒத்தாசை உடனே செய்யவேண்டுமென்றார்
ராணுவத்தில் சேர்ந்திடவும் நல்லபணம் தந்திடவும்
ஆணவமாய் இந்தியர்க்கு அறிவித்தார் சர்க்காரும்
யுத்தம் முடிந்தவுடன் ஒழுங்காய்ச் சுதந்திரத்தை
பெற்றுக்கொள்ளலாமென்று பிசகாது வாக்குறுதி
இன்று தருவீராஞல் இந்தியரும் ஒத்தாசை
நன்று செய்யக்கூடுமென நவின்றதுவே காங்கிரசும்
வந்த யுத்தம் தீரும்வரை வாக்குறுதி யாதொன்றும்
தந்துவிட மாட்டோமென்று சர்க்காரும் கூறிவிட்டு
சொந்தப்பலங்கொண்டு துணிந்துமே யுத்தத்திற்கு
இந்தியரை வேண்டுமட்டும் ஈடுபடச் செய்து வந்தார்
மந்திரிமார்களேயும் மற்றுந்தலைவரையும்
எந்தவிதமுஞ் சர்க்கார் எண்ணுது நின்றதினல்
மக்களின் ஓட்டுகளால் மந்திரியானவர்கள்
தக்கதல்ல சர்க்காரின் தன்மையென்று தானுணர்ந்து
"எடுத்த பதவியெல்லாம் இனிநமக்குவேண்டா"மென்று
கடுத்த மனத்துடனே காலிசெய்து விட்டுமேதான்
"சர்க்கார்க்கு ஒத்தாசை ஜனங்கள் செய்யக்கூடாதென்று
பக்குவமாய் எவ்விடத்தும் பதருது சொல்லிவந்தார்
"அரசாங்கத்திற்குதவி யாரும் செய்யக்கூடாதென்று
பிரசங்கம் செய்துவந்தார் பேருபெற்ற தொண்டர்களும்
"சுதந்திரம் தருவோ" மென்று சொல்லாத சர்க்கார்க்கு
இதந்தர உதவி செய்தல் ஏற்காதென்ருர் காந்திமகான்
இட்டப்படி இவ்வாறு எதிர்த்திடுதல் சர்க்காரின்
சட்டப்படி குற்றமென தண்டித்தார் தொண்டர்களே

காந்திமகானையும் கடுகிச்சிறை செய்திடவே
சாந்தமின்றி நாடெங்கும் தத்தளிக்கலானதுவே
மக்கள் மனம் மாறுவதை மதித்தறிந்த சர்க்காரும்
தக்க சமாதானம் தயங்காது பேசினர்கள்
தொண்டர்களும் தலைவர்களும் துய்ய மகான் காந்திஜியும்
சென்ற சிறைச்சாலை விட்டுத் திரும்பிவரச்செய்தார்கள்
நாட்டிலுள்ள கட்சிகளின் நல்ல தலைவர்களை
கூட்டி ஒரு முடிவு கூறுமென்றார் சர்க்காரும்
ஆக்கந்தருங் காங்கிரசின் அபிப்பிராயத்திற்கிணங்கி
லீக்குத்தலைவர்ஜின்னா நிற்காது மாறிடவே
இந்தியர் கையில் இருக்கும் அதிகாரத்தை
தந்துவிட ஆங்கிலேயர் தயங்கி யொதிங்கினர்கள்
உண்மையிலே இந்தியர்க்கு உரிய சுதந்திரத்தை
நன்மை பெறும் சர்க்கார்க்கு நல்கமனம் இல்லையென்று
அன்றுமே காங்கிரசும் அறிந்துமிக வருந்தி
என்றுவரும் நேரமென எதிர்பார்த்து நின்றதுவே
சண்டையில் மாட்டிக்கொண்டு தத்தளிக்கும்வெள்ளையர்கள்
கண்டுணர ஞாயம்பல காந்திமகான் கூறிவந்தார்
பலமில்லா நாடுகளைப் பலமுள்ளோர் ஆளும்வரை
கலகம் உலகினிலே காலமெல்லாமாகுமென்றார்
ஆயுதமும் வீரர்களும் அவனியிலுள்ளவரை
மாபெரிய யுத்தமென்றும் மயங்காது ஓங்குமென்றார்
அகங்காரங்கொண்டவர்கள் அதிகரித்திருக்குவரை
பயங்கரமான சண்டை பாரில் நடக்குமென்றார்
இந்தவிதம் காந்திமகான் இயம்பிவரும் நாளையிலே
அந்தயுத்தம் இந்தியாவை யடுத்து வந்து சேர்ந்ததுவே

## ஜப்பான் படையெடுப்பு.

கிழக்கேயுள்ள நாடுகளில் கீர்த்திபெற்ற ஜப்பானும்
பழக்கப்பட்டுவந்ததுவே பலத்த யுத்தம் செய்வதற்கு
உலகமெல்லாம் ஓர் குடைக்குள் உகந்தாள வேணுமென்று
பலநாளுமே நினைந்து பயிற்சிபெற்றுவந்ததுவே
குப்பையும் வீண் போகாது கொண்டு பொருட்கள் செய்து
இப்பாரிலே விற்கும் இயற்கையுள்ள ஜப்பானியர்
எறும்பிலும் பன்மடங்காய் எப்பொழுதும்ஓயாது
அரும்பாடுபட்டுழைத்து அகமகிழ்ந்து வாழ்வார்கள்
சொற்பச் செலவினிலே சுவைமிக்க நல்லுணவை
அற்புதமாயுண்டாக்கி அருந்தி மகிழ்வார்கள்
கல்வி செல்வம் வியாபாரம் கைத்தொழில்மற்றுள்ளதிலும்
நல்விருத்தியாகியெங்கும் நற்பெயரும் பெற்றுவந்தார்
செய்யாக்கருவியெல்லாம் செய்துசில வாண்டினிலே
ஐரோப்பிய நாட்டினிலும் அதிக தேர்ச்சியானார்கள்
ஆண்களெல்லாம் யுத்தத்திற்கு ஆன வேலைசெய்திடவும்
மாண்புபெறப் பெண்களெங்கும் மற்று வேலை செய்திடுவார்
இப்படித் தேர்ச்சிபெற்று இருந்துவந்த ஜப்பானும்
அப்பொழுது சண்டையிலே அச்சுநாட்டில் சேர்ந்ததுவே
ஜெர்மனியோடு சேர்ந்து செருக்குமிகவுங்கொண்டு
வற்மம் மிகுந்திடவே வலியப்போர் செய்ததுவே
கேள்வி கேட்பாரில்லாது கிழக்கேயுள்ள நாடுகளை
வீழ்த்தி ஜெயம் பெற்று வீறுகொண்டு வந்ததுவே
பிரிட்டிஷ் தளமென்று பேருபெற்ற சிங்கப்பூரை
வெருட்டியடித்ததுவே விழுந்துதகர்ந்திடவே

மலாய்நாடு தாய்லாந்து மற்றுமுள்ள நாடுகளும்
தலைகீழாய் வீழ்ந்திடவே தகர்த்தெரிந்து வந்ததுவே
சீமையிலிருந்து வந்து சிங்கப்பூரைக் காத்துநின்ற
மாபெரிய கப்பல்ரெண்டை மயங்காது தாக்கினரே
விமானப்படையெடுப்பு மென்மேலுமேயெடுத்து
இமைப்பொழுதில் கப்பல்களை இருங்கடலில் வீழ்த்தினரே
ஆகாய டார்பிடோவால் அப்பெரிய கப்பல்களை
வர்காய்க்கருங்கடலில் வதைத்து மூங்க வாட்டினரே
இப்படியக்கப்பல்களை இமைப்பொழுதில் ஜப்பானியர்
அப்பொழுது வீழ்த்தியதால் அதிர்ந்ததுவே ஐரோப்பா
கலங்காமனம் படைத்த கர்வமுள்ள வெள்ளையரும்
அலங்கோலமாகிடவே அன்று கண்ணீர் விட்டனரே
மேனாட்டார் செய்யாத மேலான தாக்குதலை
கீழ்நாட்டான் செய்தானென்று கிடுகிடுக்கலானரே
உலகத்திலே சிறந்த உயர்ந்த மிதக்குந்துறை
தலைசிறந்து சிங்கப்பூர் தளத்தில் இருந்ததுவே
சமுத்திரமீதினிலே தரைபோல் சிலமைல்கள்
அமிழ்திடா தோங்கி நிற்கும் அரிய மிதக்குந்துறை
டாங்கு பீரங்கி மற்றும் சண்டைத்தளவாடங்களும்
பாங்காயிறக்கி யேற்ற பக்குவமான துறை
இந்தமிதக்குந்துறையை எப்படியோ ஜப்பானியர்
சந்தடியில்லாது சமுத்திரத்திலாழ்த்திவிட்டார்
பிருட்டன் தலைவாசலென்று பேருபெற்ற சிங்கப்பூரை
உருட்டிப் புரட்டியன்று ஒன்றுமில்லாதாக்கிவிட்டார்
மலாய் நாடு தன்னிலுள்ள மலைகளிலும் தந்திரமாய்
தலைகீழாய் பாய்ந்துமல்லோ சண்டை செய்து வந்தார்கள்
விமானப்படை முன்செல்ல வேறுபடை பின் செல்ல
கவனமொடு நாடுகளைக் கைப்பற்றி வந்தனரே

பர்மாவிலும் விமானம் பறந்து குண்டு வீசிடவே
வற்மமொடு ஜப்பானியர் வலுத்த சண்டை செய்தார்கள்
ரெங்கோனைத் தாக்கியல்லோ நிர்மூலமாக்கினார்கள்
பங்கமில்லா மாண்டலேயைப் பாழாக்கி விட்டார்கள்
அந்தமான் தீவுகளும் அவர்கள் வசம் சிக்கிடவே
சொந்தமாய் அன்றதனைத் துணிந்து தளமாக்கிவந்தார்
இந்தியாவின் கீழ்த்திசையில் எங்கினுமே ஜப்பானியர்
வந்தமர்ந்து இந்நாட்டை வளைக்கவகை தேடி நின்றார்
ஜப்பானும் இந்தியாவைத் தாக்கி விடுவானென்று
அப்பொழுது மக்களெங்கும் அபிப்பிராயப்பட்டதினால்
பதறி மனஞ்சிதறி பதைபதைத்துக் கீழ்திசையை
எதிரி வருவானோவென்று எப்பொழுதும் நோக்கிநின்றார்
ஜப்பான் மடையெடுப்பின் தன்மைகண்ட வெள்ளையரும்
எப்பொழுதும் இந்தியர்கள் எதிரியை நோக்காதிருக்க
புதியவழியொன்றை புகுத்த தீர்மானஞ் செய்து
அதிக விரைவாக அனுப்பினாரே கமிட்டி யிங்கே
கிரிப்ஸெனனும் வெள்ளையரின் கீழே கமிட்டியொன்று
பொருப்புள்ள திட்டங்கொண்டு புறப்பட்டு வந்ததுவே
இந்தியாவிற்கு வந்து இணையற்ற திட்டமிதை
எந்தை மகாத்துமாவிடம் இறக்கி விளம்பினார்கள்
கிரிப்ஸ் கமிஷன் கொண்டுவந்த கீர்த்தியுள்ள திட்டமதை
விருப்பமொடு காந்திஜிக்கு விளக்கி நன்கு காட்டினாரே
யுத்தம் முடிந்தபின்பு உரிய சுதந்திரத்தை
பெற்றுக்கொள்ளலாமென்ற பெருமையுள்ள திட்டமது
காந்திமகானுமன்று கவைக்குதவாத்திட்டமதை
சாந்தமிகுந்திடவே தகாதென்று தள்ளி விட்டார்
வந்த கிரிப்ஸ் கமிஷன் வகையெதுவுஞ்செய்யாது
சென்றதுவே சீமைக்குத் திரும்பவும் வந்ததுபோல்

## நாசவேலை செய்யத்தயாரான சர்க்காரை காந்திமகான் தடுத்தது.

எப்படியும் இந்தியாவில் இறங்கிடுவான் ஜப்பானென்று
அப்பொழுது அஞ்சிவந்த ஆங்கிலேய சர்க்காரும்
வந்தபின் காப்பதிலும் வருமுன்னே காப்பதுவே
தந்திரமுள்ளவரின் சமர்த்தென்று தானினைந்து
எதிரிபடையெடுத்தால் இடைமறித்து தாக்குதற்கு
வசதிபெறவேண்டும் வழி செய்யலானார்கள்
ஆண்டு வந்த வெள்ளையரும் அன்று சமாளிப்பதற்கு
வேண்டும் வகையனைத்தும் விரைந்து செய்யலானார்கள்
ஏற்றபோது வேட்டுவைத்து இடித்துப்பாழாக்கிடவே
ஆற்றுப்பாலங்களெங்கும் அரிய துளை போட்டுவைத்தார்
ரோட்டுகளை வேண்டும்போது நொறுக்கி யெறிவதற்கு
வேட்டுக்குழிகள் தோண்டி வெறுமணலால் மூடிவைத்தார்
எதிரிபிடிக்குமிடம் எதுமின்றிப் பாழடைய
சதிசெய்து தாக்குதற்கு தகுந்ததெல்லாம் செய்துவந்தார்
மேடையுள்ள கட்டிடங்கள் மிகுதூரம் நின்றுபார்த்தால்
காடுமலை போல் தோன்றக்கலரடித்து வைத்தார்கள்
பனைமரங்கள் பீரங்கிபோல் பார்ப்பதற்குத் தோன்றிடவே
வினயமொடு வெட்டி நட்டி மிரட்டி வந்தார் குள்ளனையும்
குண்டு விழும்போது குப்புரபடுக்கவென்று
கண்டவிடங்களெல்லாம் கஜக்குளிகள் தோண்டிவைத்தார்
ஓடி ஒளிவதற்கு உற்ற தடையாயிருந்த
வீடுகளைத் தானிடித்து விசாலப்படுத்தி வைத்தார்
கவனமொடு மாற்றானைக் கடல் கடந்து தாக்குதற்கு
விமானத்தளங்களெங்கும் வேண்டுமட்டும் கட்டினார்கள்

இன்னும் பலவிதமாய் ஏற்றபோது நாசவேலை
தன்னை நடத்துதற்குத் தகுந்ததெல்லாம் செய்தார்கள்
சர்க்கார் கலங்கி யிவ்வார் தத்தளித்து நின்றதினுல்
மக்கள் மிகப்பதறி மருண்டுவரலானுர்கள்
எங்கும் மனங்கலங்கி இருக்குமந்த நாளையிலே
பங்கமில்லாக் காந்திமகான் பதருது கூறிடுவார்
நாசவேலை செய்வதற்கு நடுங்கி நின்ற சர்க்காரிடம்
ஆசையொடு காந்திமகான் அறிவுறுத்தி சொல்லிடுவார்
படையெடுக்கும் மாற்றுனை பதறியோட வாட்டாது
தடைசெய்ய ரோடு பாலம் தகர்க்கயெண்ணல்கூடாது
உதைத்தவனை ஓட்டாது உள்ளவசதியெல்லாம்
சிதைக்கவழி செய்திடுதல் சிறந்த முறையாகாது
இடிப்பதும் கட்டுவதும் இயற்கையுங்கள் நாட்டினிலே
நொடிப்பொழுதில்வேண்டியதை நூதனமாய்ச் செய்திடுவீர்
ஏழைமிக்க இந்நாட்டை இடித்துப்பாழாக்கிவிட்டால்
மீள ஒருக்காலும் மேன்மை செய்ய ஏலாது
ஆகையினுல் இந்நாட்டில் யாதொன்றும் நாசவேலை
வாகாய்ப்புரிவதற்கு வழிசெய்யக்கூடாதென்றுர்
எப்படியும் எங்கள் நாட்டில் இடிபாடு செய்வதற்கு
ஒப்பமுடியாதென்று உரைத்தாரே காந்திமகான்
அன்றுபெருஞ்சண்டையிலே அகப்பட்ட சர்க்காரும்
ஒன்றுமுரைக்காது உள்ளபடி செய்து வந்தார்
காந்திமகான் சொன்னதெல்லாங்கருத்தினிலே கொள்ளாது
தேர்ந்த மனத்துடனே செய்து வந்தார் யுத்தவேலை
சொல்வதெல்லாங்கேளாது துணிந்து வரும் சர்க்கார்க்கு
நல்லவழி காட்டவென்று நன்கறிந்து காந்திமகான்
கட்டுப்படாச் சர்க்காரின் கட்டுப்பாடானபல
சட்டங்களை மீறுதற்கு தக்க வழி தேடினுரே

வெள்ளையராட்சியிங்கு விளங்குவதால் ஜப்பான்யக்
குள்ளனுமிந்நாட்டைக் கூசாது நோக்குகின்றான்
அந்நியர் இருக்கும்வரை யாரும் நமது நாட்டை
முன்னேறித்தாக்குதற்கு முனைந்து வருவார்கள்
ஆகையினால் வெள்ளையரும் அகன்றுமே நாட்டைவிட்டு
போகவொரு திட்டமதைப் போட்டவர்கள் சட்டமெல்லாம்
மீறவேண்டுமென்றெண்ணி மேன்மைமிகுங்காந்திமகான்
சீராய் அதற்கொரு நாள் தெரிந்து வரலானாரே

---

## ஆகஸ்டுப் புரட்சி.

ஆயிரத்து தொளாயிரத்து நாற்பத்துரெண்டினிலே
ஆகஸ்டு மாதத்திலே ஆங்கிலேயர் ஆட்சியிலே
எண்ணரிய காட்சியெங்கும் இலங்கும் பம்பாய்தனிலே
கண்ணியமுடன் நடந்த காங்கிரஸ் கமிட்டியிலே
சொல்லும்முறை கேளாது துணிந்துவரும் சர்க்கார்க்கு
நல்லவழி காட்டவென்று ஞானமிக்க காந்திமகான்
"வெள்ளையனே வெளியே போ" என்ற ஒரு தீர்மானத்தை
கள்ளமில்லாத உள்ளக்கனிவுடனே கொண்டுவந்தார்
அங்கிருந்தோர் எல்லோரும் அதையாதரித்திடவே
பங்கமில்லாத் தீர்மானம் பரிந்து வெற்றி பெற்றதுவே
இந்தியாவெங்கினுமே இருந்த தலைவரெல்லாம்
சந்தோஷமாகயிது சரியென்று கொண்டார்கள்
பேப்பரெல்லாமதனை பெரிதாய் விளக்கிடவே
ஆர்ப்பரித்து மக்களெங்கும் ஆவலுடன் நின்றார்கள்

மிக்கத் துணிவுடனே வேண்டுஞ் சேவை செய்வதற்கு
தக்க சமயமதை தானேக்கி நின்ருர்கள்
ஆங்கிலேய சர்க்காரும் அனைத்து மிகத்தெரிந்து
தாங்கா மனத்துடனே தயாராகி வந்தார்கள்
சண்டையிலே நாமுமின்று சங்கடப் படும்போது
எந்தவித ஒத்தாசையும் இவர்கள் செய்யாததுடன்
இன்னும் பலவாறு இடைஞ்சல் நமக்கேற்படவே
பண்ணுகிருர்களென்று பதறிக் குதித்தெழுந்து
உடனே அடக்கியதை ஒழித்து விடுவதற்கு
திடமாக வேண்டுவன செய்து வரலானுர்கள்
நாட்டிலுள்ள போலீசெல்லாம் நன்கு தயாராக்கினுர்கள்
தோட்டாத் துப்பாக்கிகளை துடைத்து மினுக்கினுர்கள்
அன்பும் அறிவும் அரசு புரிவோர்க்குரிய
பண்பென்னும் நீதியினைப் பதறி மறந்தார்கள்
ஆயுதமும் ஆதரிப்பும் அற்றவரைப் போயடக்கல்
மாவீரம் மாகாதென்ற மகிமை மறந்தார்கள்
நடக்கும் பெருஞ்சண்டையிலே நன்மை தீமை தோன்ருது
கெடுக்கலங்கிப் போயிருந்த கீர்த்தியற்ற சர்க்காரும்
இந்தியாவின் வாசலென்று இயம்புமந்தப் பம்பாயிலே
அந்தமுடன் வந்திருந்த அறிவு மிக்கோர் மத்தியிலே
"வெள்ளையனே வெளியே போ" என்று சொல்லி சட்ட
உள்ளபடி மீறி நின்ற உத்தமன் காந்திஜியை [மெல்லாம்
வந்து சிறைப்படுத்தி வகை யெதுவுங் கூருது
எந்த இடத்திற்கோ எடுத்துக்கொண்டு சென்ருர்கள்
ஆகஸ்டு மாதத்திலே அரிய தெய்தி ஒன்பதிலே
மாபெரிய காந்திஜியை மயங்காது கொண்டு சென்ருர்

அன்பும் அறிவும் அரசாட்கிக்கேற்றபல
பண்பும் பொருந்தி நின்ற பண்டிட் ஜவஹரையும்
மற்றுந் தலைவரையும் மடக்கிப் பிடித்துமேதான்
உற்றவிடம் சொல்லாது உடனே கொண்டு சென்றார்கள்
காங்கிரசுக்காரர்களை கண்டவுடனே பிடித்து
ஆங்காரத்தோடுமே தான் அடைத்தார் ஜெயில்களிலே
ஓடிப்பதறி ஒழிந்தொதுங்குந் தொண்டரையும்
தேடிப்பிடித்து வந்து ஜெயில்களிலே சேர்த்தார்கள்
எந்த விசாரணையும் இல்லாது எவ்விடத்தும்
சந்தேகப்பட்டவரைச் ஜெயிலிலே தள்ளினார்கள்
பெருந்தலைவர்யாவரையும்பிடித்துக்கொண்டு போனதாலும்
வருந்தும்படி தொண்டர்களை வலிய வதைத்ததாலும்
ஞாயமநியாமின்றி நல்லவர் கெட்டவரின்றி
மாயமிகுந்திடவே மடக்கி யடித்ததாலும்
மக்களை மக்கள் நசுக்கல் மட்டு மீறி விட்டதாலும்
தக்க புரட்சி யெங்கும் தலைதூக்கலானதுவே
அளவுக்கு மிஞ்சி விட்டால் அமிர்தமு நஞ்சாகுமென்ற
பழமொழிக்கொப்பாக பலத்தது புரட்சியெங்கும்
ஆறு கரையுடைத்து அங்கங்கே உள்ளபல
ஊருகளையெல்லாம் உடன் வாரிப்போனதுபோல்
கட்டியடிக்குங் காளை கட்டறுத்துக்கொண்டது போல்
எட்டுத் திசையும் புரட்சி எக்காளம் போட்டதுவே
விபரம் தெரியாது வெருண்டெழுந்த மக்களெங்கும்
தவரான செய்கை பல தளராது செய்து விட்டார்
தண்டவாளங்களெங்கும் தகர்த்தெரியப் பட்டதுடன்
கண்டவிடமெல்லாந் தந்திக்கம்பியறுபட்டதுவே
சர்க்காராபீசுகளும் தாக்குதலில் சிக்கிடவே
எக்காலும் கண்டிராத இடைஞ்சல்களும் வந்ததுவே

அதிகாரம் செய்பவர்கள் அதிர்ச்சிமிகுந்தாக்குதலால்
பதறி விழுந்தடித்து படபடப்புக்கொண்டனரே
சதிசெய்து தாக்குகின்ற சண்டர்களைக்கண்டிடாது
பொது ஜனங்கள் கஷ்டப்பட புரிந்தனரே வம்புகளும்
ஊர்ஊராய் ராணுவங்கள் உடனே படையெடுத்து
தாறுமாறான பலசங்கடங்கள் செய்ததுவே
நல்லவர் கெட்டவரென்ற ஞாயமின்றி மூர்க்கமொடு
எல்லோரையும் ஒன்றுபோல இடர்படுத்தலானார்கள்
கன்னியரைக் கற்பழித்து கண்டபடி கொள்ளையிட்டு
எண்ணமுடியாதவாறு இம்சைகளும் செய்தார்கள்
கூட்டு அபராதமென்று குறித்தபலஊர்களுக்கு
போட்டுமிக வருத்திப் பொறுக்கவைத்தார் மக்களையும்
இப்படியாகப் பல இம்சைகளும் செய்துமேதான்
அப்பொழுது மக்களையும் அடக்கி ஒடுக்கினாரே

---

## வங்காளப் பஞ்சம்

---

ஆயிரத்து தொளாயிரத்து நாற்பத்துமூன்றினிலே
பாரினிலே வங்காளப்பஞ்சம் வந்து சேர்ந்ததுவே
நல்லமழைகள் பெய்தும் நவதானியம் விளைந்தும்
சொல்லரிய பஞ்சம்வந்து சொருசாகச் சேர்ந்ததுவே
எல்லா விளைந்திருந்தும் ஏற்றமிகுந்திருந்தும்
பொல்லாத பஞ்சம் வந்து புகுந்ததுவே எப்படியோ
பங்கமில்லாக் கங்கைநதி பரவியெங்கும் பாய்ந்திடவே
எங்குமில்லா நெல் விளையும் இயற்கையுள்ள வங்காளம்

பாரத நாட்டினிலே பலவழியிலுஞ் சிறந்து
வீரந்ததும்பிடவே விளங்கி வரும் வங்காளம்
அறிஞர்களும் வீரர்களும் அரிய தபோதனரும்
பெருகிவர எக்காலும் பேருபெற்ற வங்காளம்
எண்சாண் உடம்பினுக்கு இசைந்த சிரசினைப்போல்
பண்புமிக இந்தியாவில் பல்கிவரும் நன்நாடு
பாவங்கள் தீர்ந்து மக்கள் பதவிபெறுஞ்சீருரைத்த
ராமகிருஷ்ணபரமஹம்சர் நலமாயுதித்த நாடு
அமெரிக்காக் கண்டத்திலே அகிலமதக்கூட்டத்திலே
உயர்ந்ததிந்து மதமென்று உரைத்து வெற்றி பெற்றமகான்
புவியின் நிலைமையெல்லாம் புரியும்படி போதித்த
சுவாமி விவேகானந்தர் தோன்றி வளர்ந்தநாடு
புத்தியில் அரசியலில் புதிய பலம் பெற்றிருந்த
சித்தாஞ்சினதாசும் ஜெனித்த திருநாடு
சகலகலைகளுக்கும் தனிப்பெருந்தலைவரென்று
உலகினிலே பேருபெற்ற உயர்ந்த பெருங்கவிஞர்
உலகில் சிறந்தோரென்ற உயர்ந்த நோபிள்பரிசுபெற்ற
ரவீந்தரரைப்பெற்றெடுத்து நல்ல புகழ் கொண்டநாடு
ஆங்கிலக்கல்வியொடு அகிலமொழியத்தனையும்
பாங்காய் படித்து ஐ. சி. எஸ். பாசுபண்ணிபேர்பெற்ருேன்
இங்கிலாந்து ஜெர்மன் ரஷ்யா இருக்குமற்ற நாட்டினிலும்
தங்கிப்பயிற்சிபெற்ற தன்னெகரில்லாத வீரன்
கல்யாணம் என்பதையே கனவிலும் எண்ணுது
நல்லபெரும்பாடுபட்டு நாட்டினுக்குழைத்துவந்தோன்
சமயத்திற்குதக்கவாறு தாளம்போடும் தன்மையின்றி
அமையாது எண்ணியதை அப்படியே செய்திடுவோன்
என்றேனும் சாவு இருக்கு தலைமேலே என்ற
குன்ரு உறம்படைத்த கொள்கையுள்ள மாவீரன்

இமயமுதல் கன்னிவரை இருக்குமக்கள் யாபேரும்
அமைதியுடன் தேர்ந்தெடுத்த அரிய பெருந்தலைவன்
இரவுபகல் ராணுவங்கள் இடையருது காத்திருந்தும்
அரவந்தெரியாது அயல்நாடு சென்றுறைந்தோன்
பிரிட்டனும் பின்னடைய பெரும்படைகள்வேண்டுமட்டும்
திரட்டிப்போர் செய்துநின்ற செம்மை மிகுந்தீரன்
இந்தியர்கள் வீரறென்றும் இளைத்தவர்களல்லவென்றும்
இந்த உலகோர் நினைக்க ஏற்றவைகள் செய்துவந்தோன்
"ஜெய்ஹிந்த்" என்னும் தேர்ச்சி தரும் மந்திரத்தை
உய்யும்படி இந்தியர்க்கு உகந்தளித்த உத்தமனும்
இன்னும்பல வேறு ஏற்றமிகப்படைத்த
மன்னன் சுபாஷ் சந்திரபோஸைமகிழ்ந்துபெற்றவங்காளம்
இப்படிபட்டதொரு ஏற்றமிகும் வங்கத்திலே
செப்பரிய பஞ்சம் வந்து சீர்குலையச்செய்ததுவே
வேண்டும் மழைபெய்து விளைவு மிகுந்திருந்தும்
ஆண்டுபஞ்சம் வந்ததற்கு ஆனவழி கூறலையே
இந்தியாவை நோக்கி ஜப்பான் ஏறி வரும் நாளையிலே
சந்தேகங்கொண்டு மக்கள் தத்தளிக்கும் காலத்திலே
பட்டணத்து மக்களெல்லாம் பதறி விழுந்தடித்து
பொட்டணங்கள் தூக்கி வெளிப்போகுமந்தப் போதினிலே
இங்கேகுண்டு அங்கேகுண்டு இந்தா ஜப்பான்வாரானென்று
எங்குமே வீண்புரளி எழும்பி நின்ற காலத்திலே
இந்தியாவில் வீரமென்றும் ஏறிவரும்வங்காளத்தை
சந்தேகப்பட்டுமல்லோ சங்கடப்படுத்தினரே
ஏறிவரும் ஜப்பானுக்கு இங்கேதுமில்லாதிருக்க
யாருமறியாதவாறு அவஸ்தைப்படுத்தினர்கள்
அசாம் மாகாணத்திலே அளவுக்குமேல்படைகள்
உஷாராகக் கொண்டுவைத்து உரியதெல்லாம் செய்தார்கள்

உணவுஉடை பட்டாளத்திற்குரியவைகள்யாவையுமே
திணரும்படி வங்காளத்தில் சேர்த்துக்கொண்டுசென்றார்கள்
பணக்காரக்கும்பல்களும் பதுக்கிவைத்த நெல்லையெல்லாம்
இணக்கமொடு சர்க்காரும் எடுத்துக்கொண்டு சென்றார்கள்
ஆடுமாடுகோழி குஞ்சு அகப்பட்டவை அத்தனையும்
வீடுவீடாய்த் தேடியல்லோ விரைந்தெடுத்துச் சென்றனரே
இன்னும்பலவாறு இருந்ததெல்லாம் சிப்பாய்கள்
தன்னிஷ்டப்படியன்று தக்க கொள்ளை போட்டனரே
இவ்வாறு உள்ளதெல்லாம் எப்படியோ போய்விடவே
ஒவ்வாத பஞ்சம் வந்து உழற்றியதே மக்களையும்
ஏழை எளியவராய் இருந்த மக்கள் எல்லோரும்
வாழ வழியில்லாது வாடி வதங்கினாரே
உண்ண உணவுமின்றி உடுத்த உடையுமின்றி
எண்ணரிய மக்களெங்கும் ஏங்கித் தவித்தனரே
பணக்காரரைத் தவிரப் பாடுபடும் மக்கள் பலர்
உணவு கிடைக்காததினால் உலகை மறந்தார்கள்
தெருக்களிலும் திண்ணையிலும் திறந்த வெளிகளிலும்
பாக்கப் பரக்க மக்கள் பசியால் விழுந்தனரே
பஞ்சத்திலே வங்காளம் பட்ட பெரும் பாட்டையெல்லாம்
கொஞ்சமும் நாமெடுத்துக் கூறமுடிகூடாது
தேசத் தலைவரெல்லாம் ஜெயிலில் இருந்ததினால்
பேச வழியில்லாது பிரமித்தார் மக்களெங்கும்
காந்திமகானும் கவலை மிகப்பெருகி
சாந்தமொடு எச்சரித்துத் தக்கதெல்லாங் கூறிவந்தார்
மண்ணாசை கொண்டவர்கள் மயங்காது மக்களுக்கு
பண்ணுமநியாயமெல்லாம் பார்த்துமனம் பொங்கினாரே
கருணை மிகுங் காந்தி மகான் கலங்காது மக்கள் வாழத்
தருணமென்று வருமென்று தன் மனத்தே கொண்டிடுவார்

பயங்கரமான சண்டை பாரில் நடக்கும்போது
நயமில்லா வங்கப் பஞ்சம் நாட்டை வருத்தியதே!

---

## அன்னை கஸ்தூரி பாய்.

---

கஸ்தூரி பாய் அம்மையாரும் காந்திஜியும் வாழ்க்கையிலே
இஷ்டமிகுந்திடவே இருந்து வந்தார் இவ்வுலகில்
பதிமூன்று நல்வயதில் பரிந்து கலியாணம் செய்த
சதிபதியும் அன்பாக தரணியிலே வாழ்ந்தனரே
உயர்ந்த குடும்பமதில் உதித்த கஸ்தூரிபாயும்
அயர்ந்திடாது காந்திஜிக்கு அரியபணி செய்து வந்தார்
எக்காலுமே ஜெயிலில் இருந்து வந்த காந்திஜிக்கு
தக்கவைகள் வேண்டும்போது தயங்காது செய்து வந்தார்
கணவருக்கு மனைவிமார்கள் கட்டுப்படவேண்டுமென்று
மனமுவந்து வாலிபத்தில் மகாத்துமாவும் எண்ணினதால்
கஸ்தூரிபாய் அம்மையாரைக் கண்டித்ததிகாரமாய்
இஷ்டப்படி ஏவிடுவார் ஏற்ற வேலை செய்வதற்கு
படிப்பில்லா அம்மையாரை படிப்பிக்க வேண்டுமென்று
விடாப்பிடியாய்க் காந்தி மகான் விரும்பிப்பல சொல்லியுமே
பெண்களுக்கு கல்வி பிரயோஜனமில்லையென்று
திண்ணமுடன் அம்மையாரும் தெரிவித்து விட்டதினால்
அம்மையார்மேல் காந்திஜியும் அதிக வெறுப்புடனே
செம்மைபெறவேண்டும் சீர்திருத்தம் செய்துவந்தார்
வைதீகமரபினிலே வந்துதித்த அம்மையாரும்
செய்யநம்காந்திஜியின் செய்கைதனை வெறுத்தார்

காந்திமகான் ஜாதிபேதம் கருதாதெவருடனும்
சேர்ந்து உணவருந்தும் செயலை மிகவெறுத்தார்
இல்லாத மக்களைப்போல் எழிய வாழ்க்கை செய்திடுதல்
நல்லதல்லவென்று சொல்லி நாளெல்லாங்கூறிடுவார்
நகையும்பட்டாடைகளும் நன்குவிளங்கிடவே
வகையாய் உயர்ந்தவராய் வாழவேண்டுமென்றிடுவார்
இவ்விபரம் காந்திஜிக்கு ஏற்காதிருந்ததினால்
ஒவ்வாதிருவருமே ஒருவாறு வாழ்ந்து வந்தார்
நாளடைவில் காந்திமகான் நல்லொழுங்கை நன்கறிந்து
மீளாது அம்மையாரும் வேண்டும்பணி செய்துவந்தார்
தென்னாப்பிரிக்காவில் செய்த போராட்டங்களில்
அம்மையாரும் அண்ணலுடன் அரும்பணிகள்செய்து வந்தார்
அறப்போரில் ஈடுபட்டு அன்று பலதடவை
சிறைச்சாலை தன்னிலுமே சென்றுவந்தார்அம்மையாரும்
நம்நாட்டில் காந்திமகான் நடத்திய போராட்டங்களில்
தம்மாலியன்றமட்டும் தயங்காதுழைத்துவந்தார்
பெண்களுக்குஊக்கமூட்டிப் பெரும்படைகளாய்த்திரட்டி
அன்புமிகுந்திடவே அரும்பணிகள் செய்து வந்தார்
சிறுவயதில் காந்திமகான் தினமும்பயங்கொண்டிடுவார்
மறுவில்லாஅம்மையாரும் மயங்காது தேற்றிடுவாராம்
அஞ்சா நெஞ்சம்படைத்த அன்னைகஸ்தூரிபாயும்
துஞ்சாது காந்திஜிக்கு துணிவுவரச்செய்துவந்தார்
கலங்கா மனம்படைந்த கஸ்தூரிபாய் அம்மையாலே
மயங்காது தொண்டு செய்ய மகாத்மா துணிந்ததென்பார்
அவ்வளவு சக்திபெற்று அம்மையாரும் பின்நாளில்
எவ்வளவோ தேசசேவைஏற்றமொடுசெய்துவந்தார்
ஆகஸ்டுப்புரட்சியென்ற அரியபோராட்டத்திலே
தேசத்தலைவரெல்லாம் சிறைசென்ற காலத்திலே

அன்பின்சிகரமான அன்னை கஸ்தூரிபாயை
செம்மையில்லாச் சர்க்காரும் ஜெயில் கொண்டுசேர்த்தனரே
தள்ளாத வயதினிலும் தாய்நாட்டிற்காயுழைத்த
கள்ளமில்லா அம்மையாரைக் காவலிலே வைத்தனரே
தளர்ந்தவயதினிலே ஜயில் வாழ்க்கைதாங்காது
அயர்ந்திடவே நெஞ்சுநோயும் அம்மையார்க்குவந்ததுவாம்
சிறையில் சென்றுசுற்றத்தார்கள் சிகிச்சைகளும் செய்வதற்கு
அரசாங்கத்தாருமன்றி அனுமதியும் தந்தனரே
என்னசெய்தும் நோய் சிறிதும் இறங்காதிருந்ததினால்
வின்னமின்றி அம்மையாரை விடுதலையுஞ் செய்தார்கள்
வைத்தியங்கள்வேண்டுமட்டும்வகையுடனேசெய்து பார்த்து
நற்சுகமில்லாது கடை நாளும் வந்து சேர்ந்ததுவே
சாகும்வரை அம்மையாரும் தன் பிரஞ்ஞை பெற்றதினால்
வாயில் கங்கைநீரையூற்ற வழுத்தினரே மைந்தனிடம்
தேவதாஸ் காந்தியவர் தெளிந்தகங்கை நீரை வாயில்
ஆவலுடன் ஊற்றிடவே ஆவியும் பிரிந்ததன்றே!
சிவராத்திரித்தினத்தில் காந்திமகான் தன்மடியில்
தலைசாய்ந்த வண்ணமாகத் தரணிவிட்டு நீங்கினரே
அன்று பெருந்துக்கத்திலே அவனியெல்லாம்ஆழ்ந்திடவே
என்றுமில்லா அன்னையையும் இழந்ததுவே இந்தியாவும்
அன்னையரின் ஞாபகார்த்தமாகயிந்த நாட்டினிலே
எண்ணரிய ஆஸ்பத்திரிகள் எங்கும் தோற்றுவித்தார்கள்
அந்தமிகுங் கஸ்தூரிபாய் அன்னையாரின் சேவைகளை
இந்தஉலகமினி என்றுமறந்திடாதே.

---

## தலைவர்கள் விடுதலையும், சட்டசபை தேர்தலும்.

---

தலைவர்களைஜெயிலில் வைத்து சங்கடப்படுத்திவந்த
பிரிட்டிஷரசாங்கத்தின் பிடிவாதந்தாங்காது
இருபத்தொருநாட்கள் இனியஉபவாசம்
திரும்பவும் கொண்டனரே ஜெயில்தனிலேகாந்திமகான்
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிமனந்தெளிந்து
உண்ணாவிரதமதை உடனடியாய்க்கொண்டனரே
காந்திமகான் விரதங்கண்டிப்பாய் கொண்டிடவே
சாந்தமின்றி மாந்தரெல்லாம் தத்தளிக்கலானார்கள்
இந்தியத்தலைவர்களை இன்றே விடுவிப்பீரென்று
தந்திகளும் கடிதங்களும் சர்க்கார்க்கு வந்தனவாம்
என்னதான் வந்தாலும் இரங்காது சர்க்காரும்
தன்னகங் கொண்டுமேதான் தயங்காதிருந்துவிட்டார்
களங்கமில்லாக் காந்திஜியின் காரியதரிசியான
மகாதேவதேசாயும் மரித்தனரேஜெயிலிலன்று
அந்தரங்க காரியதரிசியும் அன்னைகஸ்தூரிபாயும்
சென்றதினால் காந்திமகான் சிந்தைமிகக்கலங்கி
தேகநிலைமிகவும் சீர்கேடடைந்திடவே
வேகமாய்ச் சர்க்காரும் விடுவித்தார் காந்திஜியை
சிறைச்சாலை விட்டுவந்து தெய்வீகக் காந்திமகான்
நினைத்தாரே ஹிந்து முஸ்லீம் நீங்காஒற்றுமைபெற
ஒற்றுமையாய் வாழ்வதற்கு உகந்தவொரு நல்வழியை
முற்று விவாதித்தனரே முஸ்லீம் லீக் ஜின்னாவுடன்
எதுவும் பிரயோஜனம் இல்லாது போனதினால்
அதிகவருத்தத்துடன் அயர்ந்து வரும் நாளையிலே

வைசிராயாயிருந்த வலிமைமிக்க வேவல்துரை
ஐயமின்றி காந்திஜியை அழைத்தனரே சிம்லாவிற்கு
சிம்லாவில் காந்திஜியும் சிறந்த வேவல் வைசிராயும்
இன்பமொடு நாட்டினுக்கு ஏற்றதெண்ணி வருகையிலே
சிறைச்சாலைதன்னிலுள்ள சிறந்த தலைவரெல்லாம்
விடுதலையும் பெற்றிடவே விரைந்து வெளியேறினர்கள்
நேசநாடு வெற்றிபெற நிமிர்ந்த நாடு தோல்வியுற
மோசமாய் நடந்த யுத்தம் முழுதும் முடிந்ததன்றே
முசலோனி அழிந்திடவும் ஹிட்லர் ஒழிந்திடவும்
அசந்து ஜப்பான் வீழ்ந்திடவும் அன்றுயுத்தம் நின்றதுவே
வெற்றிதோல்வி யென்ற வெறும்பேச்சினைத்தவிர
சக்தியெல்லாமிழந்து தயங்கினதே ராஜ்ஜியங்கள்
எதிரி அழிவதற்குள் இருந்த சக்தியத்தனையும்
சிதறிடவே மன்னரெல்லாம் திகைத்து நடுங்கினர்கள்
ஆயுதமும் வீரர்களும் அரிய ஜனக்கூட்டங்களும்
மாபெரும் கட்டிடங்களும் மண்ணோடு மக்கினவே
தக்கபெருங்கப்பல்களும் டாங்கு பீரங்கிகளும்
மக்கள் வாழ்விற்குரிய மற்றவையுந்தீர்ந்ததுவே
எல்லாந் துலைந்ததினல் எங்கும் அகவிலையும்
பொல்லாத பஞ்சமுமே புகுந்து வரலானதுவே
கலகம் பிறந்தால் ஞாயம் கட்டாயம் பிறக்குமென்ற
உலகப்பழமொழியை உணர்ந்தனவே ராஜ்ஜியங்கள்
மக்களை மக்கள்மடக்கி மண்ணிலரசாளுவதே
தக்கபெரும் யுத்தம் வரத் தருந்த நல்ல காரணமாம்
என்றறிந்து யுத்தமினி என்றும் வராதிருக்க
நன்றுசெய்யவேண்டுமென்று ராஜ்ஜியங்கள் எண்ணினதால்
அவரவர்கள் நாடுகளை அவரவரே ஆளுதற்கு
இயன்றவரை வேண்டுவன இசைந்துசெய்யலானர்கள்

இந்தியாவை ஆண்டு வந்த இங்கிலாந்துபார்லிமெண்டில்
அன்று தொழிலாளரின் ஆதிக்கமிருந்ததினால்
இந்தியநாட்டினுக்கு ஏற்ற சுதந்திரத்தை
தந்திடுவோமென்று சொல்லித் தகுந்தவைகள் செய்தனரே
சட்டசபைகளுக்கு தக்கபிரதிநிதிகள்
திட்டப்படி மக்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்
தேர்தலில் காங்கிரசை செறுத்தெதிர்த்த கட்சிசில
தோற்கடிக்கப்பட்டதுவாம் துணிந்துபொதுமக்களினால்
இந்தியர்க்கு காங்கிரசே ஏற்றதென்னும் உண்மையினை
அன்றறிந்து கொண்டனரே ஆங்கிலேய சர்க்காரும்
இங்கிலீஷிடமிருந்து எல்லா அதிகாரத்தையும்
சங்கையின்றி இந்தியர்க்குத் தருவதாயறிக்கை செய்தார்
சூழ்ச்சிமிக்க வெள்ளையரை சுருக்காயொழிப்பதற்கு
தாழ்ச்சியின்றி காந்திமகான்தகுந்ததெல்லாம்செய்துவந்தார்

---

## தென்னாடு சுற்றுப்பிரயாணமும். இடைக்கால சர்க்கார் அமைத்தலும்.

---

பாஷைபதினெட்டு பாரதநாட்டினிலே
பேசிவருவதினால் பிரிவுபலவாகுதென்று
இந்தியர்கள் எல்லோர்க்கும்ஏற்றபொதுபாஷையொன்றை
அந்தநாள் காந்திமகான் அறிந்தொழுங்கு செய்தனரே
அதிகமக்கள் பேசுகின்ற அரிய ஹிந்துஸ்தானியதை
தெரிந்தெடுத்து தேசமெங்கும் தேர்ச்சிபெறச் செய்தனரே
தேசப்பொதுபாஷையென சிறந்த ஹிந்துஸ்தானியதை
பேசிவரத் தேசமெங்கும் பிரச்சாரம் செய்தார்கள்

காங்கிரஸ் தீர்மானப்படி கற்பிக்கச்சபைகளெங்கும்
பாங்குபெறவேயமைத்துப் படிப்பித்தார் ஹிந்துஸ்தானி
தென்னிந்தியாவினுக்குச் சிறந்த பிரச்சார சபா
சென்னையில் ஆரம்பித்துச் செய்தார் பிரச்சாரம்
இந்தச்சபை துடங்கி இருபத்தைந்து வருடம்
சென்றதினால்"வெள்ளி விழா"சிறப்பாய் கொண்டாடினார்கள்
அந்த விழாவினுக்கு அன்புததும்பிடவே
வந்தனரே காந்திமகான் வளமிருந்ததென்னாடு
ஹிந்திபிரச்சாரசபா இனிதோங்க வந்தமகான்
சுந்தரஞ்சேர் தென்மதுரை துதிக்கமனங்கொண்டனரே
சொக்கர்மீனாக்ஷியம்மை துலங்குமதுராபுரியை
தக்கமகிழ்ச்சியுடன் தரிசிக்க வந்தனரே
உலகினிலே எக்காலும் உயர்ந்தபல காட்சியுடன்
தலைசிறந்து ஓங்கிடவே தனிப்பெருமை கொண்டநகர்
நாலுபெருங்கோபுரமும் நல்லபல வீதிகளும்
சாலஉயர்ந்தோங்கும் சரியான தென்மதுரை
ஆதிமுதலின்றுவரை ஆனந்தம் பொங்கிடவே
மேதினியிலே விளங்கும் மீனாக்ஷிபட்டணமாம்
இப்பெரிய பட்டிணத்தில் எழுந்திருந்து காட்சிதரும்
சொக்கர் மீனாக்ஷியையுந் துதிப்பதற்கு வந்தனரே
ஹரிஜனங்கள் கோவிலுக்குள் ஆனந்தமாய்ச்சென்று
தரிசனமுஞ்செய்வதற்கு தகுந்தவழி செய்ததினால்
தென்னாட்டுக் கோவில்களில் தீண்டாதார் செல்வதற்கு
முன்னால் திறந்துவிட்ட முக்கியகோவிலிதினால்
கண்டு தரிசித்திடவே காந்திமகான்சித்தங்கொண்டு
அன்று மதுரைவந்து ஆனந்தங்கொண்டனரே
அன்னை மீனாக்ஷியையும் அப்பனந்தச்சொக்கரையும்
தன்னயமில்லாத மகான் தரிசனமும் செய்தாரே



சொக்கர் மீனாக்ஷியையும் துதித்துமனமகிழ்ந்து
திக்கெல்லாம் போற்றுகின்ற தென்பழனி சென்றாரே
பழனிமலை முருகன் பாதாரவிந்தமதில்
தலைவணங்கி காந்திமகான் தரிசனமும் செய்தாரே
பக்தி மிகுந்திடவே பழனியாண்டியைத்துதித்து
சக்திபெற மக்களுக்கு தக்க பிரசங்கம் செய்தார்
இன்னும் பலவாறு ஏற்றவைகள் செய்துகொண்டு
தென்னாடு விட்டுமல்லோ சென்றாரே காந்திமகான்
இந்தியாவந்திருந்த இங்கிலீஷ் மந்திரிசபை
அன்பு ததும்பிடவே அண்ணலையுங்கண்டதுவே
கண்டு மிகப்பணிந்து கருதும் சுதந்திரத்தை
நன்று விவாதித்து ஞாயம்பல கூறினதே
எப்படியும் கொஞ்சக்காலம் இடைக்காலசர்க்காரை
செப்பமுடன் நடத்தத் தீர்மானம் செய்தனரே
இடைக்கால சர்க்காரை இன்பமொடு நேருஜியின்
தலைமைதனிலமைக்க தகுந்தவைகள் செய்து வைத்தார்
தடையின்றிப் பண்டிட் ஜவஹர்லால் நேருஜியும்
இடைக்கால சர்க்காரை இனிது நடத்தி வந்தார்
பாக்கிஸ்தான் கேட்டுநின்ற பதவியுள்ள ஜின்னாவை
சேர்ந்தரசு செய்யவென்று தெரிவித்தார் சர்க்காரும்
இந்தியர்க்கு காங்கிரசே ஏற்ற ஒரு ஸ்தாபனமாம்
அங்கதனை நாம் பிரிக்க ஆகாதென்று கூறிவிட்டார்
அதிக மக்கள் வாக்குறுதி அமைந்துவரும் காங்கிரசே
உரியவைகள் செய்வதற்கு உகந்தகட்சியாகுமென்றார்
ஆகையினால் காங்கிரஸின் அபிப்பிராயம்போலெவரும்
ஞாயமாய் நடப்பதுவே நல்லதென்று கூறிவிட்டார்
இடைக்கால சர்க்காரும் இனிதோங்கி நிற்கையிலே
கலக்கமின்றி மக்களெங்கும் களிந்து வரும் நாளையிலே

## நவகாளிப் பிரயாணமும் பாக்கிஸ்தான் பிரிவினையும்.

பாக்கிஸ்தான் பிரிப்பதற்கு பரிகாரம் சொல்லாததால்
லீக்குத்தலைவர் ஜின்னு நினைத்தார் கிளர்ச்சிசெய்ய
தங்கள் மனக்கருத்தைச் சர்க்காரும் தலைவர்களும்
இங்கறிய வேண்டுமென எடுத்தார் நடபடிக்கை
நேரடி நடபடிக்கை நினைத்து ஹர்த்தால் செய்திடவே
கோரமிகுந்ததிகக் கொலைபழிகள் ஆனதுவே
இந்துமுஸ்லீம்களுக்குள் என்றுமில்லா வேற்றுமைகள்
அன்றுமிகுந்திடவே அலங்கோலமானதுவே
எண்ணிலா வருடமிங்கு இசைந்து வாழ்ந்த மக்களுக்குள்
கண்ணியமில்லாமலன்று கலவரங்கள் ஆனதுவே
மதப்பேய்பிடித்தவர்கள் மனமருண்டறிவுகெட்டு
சிதைத்தனரே வேண்டுமட்டும் தீங்கறியாமக்களையும்
இன்றைக்கொருமதமும் நாளைக்கொருமதமும்
சென்றுவரும் தன்மையுள்ள சிறியவொரு கொள்கையிலே
காரணமில்லாது சிலர் கலவரங்கள் செய்திடவே
பாமரமக்களெல்லாம் பாதிக்கப்பட்டனரே
எங்குமில்லாதவாறு இந்தக்கலவரமும்
வங்காள நாட்டினிலே வலுத்துமிக வந்ததுவாம்
மந்திரியும் வைசிராயும் மற்றுமுள்ள வீரர்யாரும்
சென்றுபார்க்க ஏலாது! சிறந்த விமானங்களில்
பறந்துமே பார்த்துவந்த பயங்கரக்கலகமதை
நயம்பெறவே காந்திஜியும் நடந்துபார்க்கச் சென்றனரே
என்றேனும் ஓர்நாள் இறக்குமுயிர்க்கஞ்சாது
அன்றுமே காந்திமகான் அன்புறுகச்சென்றனரே

நவகாளியை நினைத்து நாடு நடுங்கையிலே
தவமுனிவர் காந்திமகான் தயங்காது சென்றனரே
மேல்பறந்து வீரரெல்லாம் மெய்நடுங்கப்பார்த்த நாட்டில்
கால்நடையாய்க்காந்திமகான் கலங்காது சென்றனரே
ஊர்ஊராய்ச் சென்றுமகான் உழன்று நின்ற மக்களுக்கு
தேருதலும் கூறியல்லோ சேர்ந்து வாழச்செய்துவந்தார்
ஒருநாட்டில் ஓரூரில் உயிர்வாழும் மக்களுக்குள்
மதவெறியால் மாறுபடல் மனிதச்செயலாகாதென்றார்
உலகில் பிறந்தழியும் உயிரினத்திற்கில்லாத
மதப்பிரிவு ஆறறிவு மக்களுக்கு ஆகாதென்றார்
பச்சிகளும் மிருகங்களும் பாரில் வாழும் மற்றவையும்
அச்சமின்றிக் கட்சியின்றி ஆட்சியின்றி வாழலையா?
ஆறறிவு மக்களென்றும் அவனியில் உயர்ந்தோரென்றும்
பேரளவில் சொல்லிக்கொண்டு பிரிவுபட்டுச்சாகலாமா?
மற்றவரைத் தம்முயிர்போல் மதித்து நடப்பதுவே
உற்றமதங்களிலே உயர்ந்தமதமாகுமன்றோ
நற்குணமே ஆண்டவனும் ஞானமின்றித் தீங்குசெய்யும்
துற்குணமே சாத்தானும் சோதரரே நன்கறிவீர்
என்றுமே காந்திமகான் இன்னும்பலவிதமாய்
அன்றங்கே மக்களுக்கு அரிய உபதேசம் செய்தார்
கால்நடையாய்க் காந்திமகான் கலகப்பிரதேசமெங்கும்
சீலமிக மக்களுக்குத் தேருதலுங்கூறிவந்தார்
அண்ணலுபதேசப்படி அறிவுபெற்று மக்கள்பலர்
கண்ணியமிகுந்திடவே கலவரத்தை விட்டொழித்தார்
மகாத்மா செல்லாத மற்றுமுள்ள ஊருகளில்
விபத்துகளோங்கிடவே வீண்கலகமானதினுல்
ஜின்னுவும் காந்திஜியும் சேர்ந்துமே கூட்டறிக்கை
வின்னமில்லாதிருக்க வேண்டிச்சில விட்டனரே

என்னதான் செய்தாலும் இரங்காது குண்டர் கூட்டம்
துன்பம் பெருகிடவே தொல்லைபல செய்ததுவே
நாட்டைப்பிரித்து விட்டால் நன்மைகிடைக்குமென்றும்
கூட்டக்கொலைபழிகள் குடியோடிப்போகுமென்றும்
தேசத்தலைவர் பலர் சிந்தித்து வந்ததாலும்
நாசத்தைப்போக்கயிது நலமென்றறிந்ததாலும்
காந்திமகானும் மற்றும் கண்யமுள்ள தலைவர்களும்
சாந்தமொடு பிரிவுசெய்ய சம்மதமும் தந்தனரே
தேசத்தைப்பிரிப்பதற்கு சிறிதுமனமில்லாதார்
மோசத்தை விலக்குதற்கு முனைந்து சரிப்பட்டனரே
பேதமற்று ஞானம்பெற்று பிரிந்த நாடு பின்நாளில்
ஏதமற்று ஒன்று சேர்ந்து இருக்குமென எண்ணினர்கள்
இவ்வாறு எண்ணியன்று இந்தியாவைப்பிரிக்க
ஒவ்வாதிருந்தவரும் ஒத்துமனங்கொண்டார்கள்
ஹிந்துஸ்தான் பாக்கிஸ்தான் என்று இருபிரிவாய்
அன்றுபிரித்தனரே அரிய பெருந்தேசமிதை
பஞ்சாப்பில் வங்கத்தில் பாதியொடு சிந்துவையும்
கொஞ்சம் பிரித்தாளக் கொடுத்தனரே பாக்கிஸ்தான்
இமயமுதல் கன்னிவரை என்றும் போல் ஹிந்துஸ்தான்
புவியில் உயர்ந்திடவே புனிதம் பெற்று ஓங்கியதே
ஞாலம் புகழ்ந்திடவே நன்மைபல பெற்றிடவே
சீலமொடு ஹிந்துஸ்தான் சீர் சிறப்புக்கொண்டதுவே

---

# சுதந்திரத் திருநாள்

ஆயிரத்து தொளாயிரத்து நாற்பத்துஎழினிலே
ஆகஸ்டு பதினைந்து ஆன வெள்ளிக்கிழமையிலே
உலகினிலே பேருபெற்ற உயர்ந்த நமதிந்தியாவும்
தலைசிறந்து பெற்றதுவே தகுந்த சுதந்திரமும்
ஆங்கிலேயர் செய்து வந்த அதிகாரம் அத்தனையும்
ஓங்கிடவே இந்தியர்பால் ஒப்படைக்கப்பட்டதுவே
ஆண்டுபல அந்நியர்க்குள் அடிமைப்பட்டு வாழ்ந்தநாடு
மீண்டு சுதந்திரத்தை மேன்மையுறப் பெற்றதுவே
தாதாபாய் நௌரோஜி சக்தியுள்ள நம்திலகர்
லாலாலஜபதிராய் ஞானமிக்க சீயார்தாஸ்
கண்ணியஞ்சேர்மோதிலால்நேர்களங்கமில்லாகஸ்தூரிபாய்
இன்னுமுள்ள தலைவரெல்லாம்எதிர்பார்த்த சுதந்திரநாள்
தாரணியை ஆள்வதற்கு தகுந்ததோருழைப்பாளரென்ற
வீரகவி பாரதியார் விரும்பிநின்ற சுதந்திரநாள்
சுதந்திரக் கப்பலோட்டித் துணிந்துபல பாடுபட்ட
சிதம்பரம் பிள்ளையுமே தேடிநின்ற சுதந்திரநாள்
ஏற்றமிகும் 'ஜெய் ஹிந்த்' இந்நாட்டில் ஓங்க வைத்த
நேத்தாஜிசுபாஷ்சந்த்ரபோஸ்நினைத்திருந்த சுதந்திரநாள்
இன்னும்பல தலைவர்களும் எண்ணிலாத்தொண்டர்களும்
முன்னமெதிர்பார்த்து வந்த முக்கியமான நன்நாள்
எண்ணியதை ஒண்ணியவாறிவ்வுலகிலே முடித்த
புண்ணியவான் காந்திமகான் புனிதமிகுஞ் சேவையினுல்

வந்துமே சேர்ந்ததுவாம் வசதியொடு மக்களெல்லாம்
சொந்த இந்த நாட்டினிலே சுகம்பெற்று வாழ்ந்திடவே
அந்தவொரு நன்னுளை அகில இந்தியாவெங்கும்
சந்தோஷம் பொங்கிடவே ஜனங்களெல்லாம் கொண்டாட
இமயமுதல் கன்னிவரை இருக்குமிடங்களெல்லாம்
ஜெயபேரிகை முழங்க தெய்வலோகம் போலிலங்க
தூயவசோகச்சக்கரம் துலங்கும் புதுமை கொண்ட
தாயின் மணிக்கொடிகள் தாராளமாய்ப் பறக்க
ஆலயங்களெங்கினுமே அலங்காரப்பூசைகளும்
மேளதாளம் அதிர் வெடிகள் மிகுந்து விளங்கிடவே
இன்னும் பலகாட்சிகளும் எண்ணிலாக்கொண்டாட்டங்
மின்னும்படி எங்கினுமே மென்மேலுமோங்கி நிற்க[களும்
உலகிலுள்ள ராஜ்ஜியங்கள் உகந்துமே நோக்கிநிற்க
பலவிதசிங்காரத்தொடு பாரதநாடு ஜொலிக்க
கண்கொள்ளாகாட்சியெங்கும் கனிந்து சிறந்தோங்க
மன்னன் ஜவஹர்லால் மகிழ்ந்து தலைமை கொண்டார்
வந்தேமாதரம் ஜெய்ஹிந்த் வானமளாவிடவே
பண்டிட் ஜவஹருமே பரிந்து தலைமை கொண்டார்
தேசத்தலைநகராய்த் திகழுகின்ற டில்லியிலே
மாசில்லா நேருஜியும் மகிழ்ந்து தலைமைகொண்டார்
இந்தியப் பிரதமர் என்ற பதவி கொண்டு
அன்று நம் பண்டிட்ஜியும் அமர்ந்தாரரியாசனத்தே
வல்லமைமிக்கவராம் வல்லபாய்படேல் அவர்கள்
உள்நாட்டு மந்திரியாய் உகந்து பதவிகொண்டார்
ராணுவமந்திரியாய் நலமுள்ள பல்தேவ்சிங்
வேணபலசக்தியுடன் விரும்பிப்பதவிகொண்டார்
ஆட்சிபுரியுஞ்சபையின் அரும்பெருந்தலைவராக
மாட்சிமைசேர் ராஜேந்திரர் மகிழ்ந்து அமர்ந்தனரே

காந்திமகான் வாழ்த்திடவும் காசினியோர்போற்றிடவும்
சாந்தமிருந்திடவும் தலைமை பெற்று நின்றனரே
சுதந்திரசர்க்காரும் துதிபெற்று ஓங்கிவர
இதந்தர வேண்டியவை இனிது செய்யலானார்கள்
ஆண்டு வந்த அந்நியரால் அலங்கோலமானவெல்லாம்
மீண்டும் சரிப்படுத்தி மேன்மையுறச் செய்திடவே
ஜாதிமதபேதமின்றிச் சகோதரராய் இந்தியர்கள்
நீதிநெறிகுன்றாது நேர்மையொடு வாழ்ந்திடவே
வேண்டும்வழிகளெல்லாம் விரைவில் தெரிந்தெடுத்து
ஈண்டமுல் நடத்துதற்கு ஏற்றதெண்ணி வந்தார்கள்
யுத்தக்கொடுமையினால் உலகிலுள்ள தேசமெல்லாம்
மெத்தபெரும் பஞ்சத்தினால் மிகுந்த கஷ்டப்பட்டதுபோல்
பாரதநாடும் பலத்தபெரும்பஞ்சத்திலே
சீரழிந்து வந்ததினால் சிறந்ததனைச் சீர்ப்படுத்த
எண்ணியே நம் சர்க்காரும் ஏற்றவைகள் நன்கறித்து
கண்ணியமிகுந்திடவே கலங்காது செய்து வந்தார்
பிழைக்கவழியில்லாத பெரும்பஞ்சம் வந்ததினால்
நிலைக்கமுடியாதென்று நினைத்துவிட்டதேசமிதை
பிரிட்டனுமேலாதென்று பின்னடைந்தபஞ்சநாட்டை
வெருட்டி நயமுரைத்து வேண்டியன செய்தார்கள்
பணக்காரக்கும்பலெங்கும் பதுக்கிவைத்த தானியத்தை
இணக்கமொடனே யெடுத்து எல்லோர்க்கும் தந்தார்கள்
கள்ளமார்க்கட்டுகளில் கண்டபடி விற்றுவந்த
கொள்ளைலாபக்காரெல்லாம் குலுங்கவழி செய்தார்கள்
இந்தவிதமாக இன்னும்பல சேவைசெய்து
வந்தபஞ்சம் தீருதற்கு வசதிசெய்யலானார்கள்
பெரியயுத்தப் பஞ்சத்திலே பிறண்டு மக்கள் நிற்கையிலே
பருவமழையில்லாத பஞ்சமும் வந்ததுவே

இப்படி இடைஞ்சலின்மேல் இடைஞ்சல் மிகுந்ததினல்
எப்படியும் மக்களுய்ய எற்றவைகள் செய்தார்கள்
ஆறுவருடமாக ஆனபெரும்பஞ்சமின்னும்
தீரவழியில்லாது திணறிவரும் நாளையிலே
அரிய சுதந்திரத்தை அடைந்த சில மாதத்திலே
பெரியவகுப்புவாதம் பின்னும் வந்து சேர்ந்ததுவே
என்னதான் வந்நாலும் இளைக்காது சர்க்காரும்
வின்னமில்லாதிருக்க வேண்டியவை செய்துவந்தார்
எப்படிப்பட்டபெரும் ஏகாதிபத்தியமும்
தப்பமுடியாதபல சங்கடங்கள் அத்தனையும்
மாட்சிமைசேர் நேருசர்க்கார் மகிழ்ச்சியொடுதாங்கி நின்று
தாழ்ச்சின்றி மக்களுக்குத் தகுந்தவைகள் செய்திடவே
இதந்தர மக்களுக்கு ஏறறவைகள் செய்துகொண்டு
சுதந்திர சர்க்காரும் துணிந்தோங்கலானதுவே

---

## காந்திமகான் சேவைகளும் கடைக்காலமும்

---

போர்பந்தரில் பிறந்து புகழ்ச்சி மிகவும் பெற்று
சீர்பெறவே மக்களுக்குச் சேவை செய்து வந்தமகான்
புத்தர் கிறிஸ்துநாதர் போன்றிங்கே மக்களுக்கு
மெத்தவும் பாடுபட்டு மேன்மை தந்த காந்திமகான்
வயதுபதிமூன்றினிலே வழுவில்லாகஸ்தூரிபாயை
நயமாய்க் கல்யாணம் செய்து நாட்டினுக்குழைத்து வந்தார்
தாய்சொல்லைத்தட்டாது சத்தியஞ்செய்து கொடுத்து
சீமைசென்று பாசுபண்ணித் தேர்ச்சிமிகப்பெற்றுவந்தார்
பம்பாயில் ராஜ்கோட்டில் பாரிஸ்டர் வேலைசெய்து
தெம்பாகக் கொஞ்சகாலம் ஜீவியமும் செய்துவந்தார்

தாதா அப்துல்கம்பெனியின் தன்வழக்கைப்பேசுதற்கு
ஆதரவாகவே தென் ஆப்பிரிக்காவுஞ்சென்ருர்
ஆப்பிரிக்காநாட்டினிலே அவஸ்தைபலபட்டுமேதான்
தாய்நாட்டு இந்தியர்க்குத் தக்க நன்மை செய்துவந்தார்
தலைவரி வியாபாரவரி தங்குவரி மற்றுமுள்ள
நிலவரியும் இந்தியர்க்கு நீங்கவழி செய்துவிட்டார்
ஜெயிலில் பலதடவை சென்று பெருங்கஷ்டப்பட்டு
பதருது மக்களுக்கு பலத்தபல நன்மை செய்தார்
அடிமைகளாய் இந்தியரை அயல் நாடு கொண்டுவிற்ற
கொடுமைகள் அத்தனையும் குடியோடிப்போகவைத்தார்
தேயிலைத்தோட்டங்களில் சென்ற மக்கள் மீளாது
ஆவிதுறந்து வந்த அநியாயந்தீர்த்து விட்டார்
உழைப்புக்கூலியின்றி உளண்ட தொழிலாளரெங்கும்
தகுந்தபடி கூலிபெறத் தக்க வழிசெய்துவிட்டார்
சபர்மதி ஆச்சிரமம் தன்னை அமைத்து வைத்து
அமைதியொடுதொண்டர்பலர் அருஞ்சேவைகாணவைத்
ஆயிரத்துதொளாயிரத்து பதினலிலே நடந்த [தார்
ஈடில்லா ஜெர்மன் போரில் இங்கிலீசுக்குதவிவந்தார்
“ஒத்துழையாமை” என்னும் உயர்ந்த இயக்கமதை
இத்தலமெங்குந் தெரிய இனிதுநடத்திவந்தார்
கதருடுத்தல் மதுவிலக்கல் கட்டாய ஹிந்தி கற்றல்
இதமிலாத்தீண்டாமைதள்ளல் இவையனைத்தும் செய்து
வகுப்பு வாதந்தீருதற்கு வாரமூன்று உண்ணுத (வந்தார்
மிகப்பெரும் விரதமதை மேதினியிலன்று கொண்டார்
பாரதநாடெங்கும் பலதடவை சுற்றிவந்து
சீறுபெற மக்களுக்கு சிறந்த சேவை செய்து வந்தார்
கல்கத்தா பெல்காம் காங்கிரஸ் மகாநாட்டினிலே
நல்லபல திட்டம் போட்டு நாடெங்கும் சேவைசெய்தார்

இப்பெரிய பூமியிலே எவருமே செய்தறியா
உப்புச்சத்தியாக்கிரகம் உகந்து செய்து வெற்றிகொண்டார்
மாட்சியொடு வட்டமேஜை மகாநாடு சென்றங்கே
ஆட்சி செய்யும் வெள்ளையர்க்கு அரிய உபதேசம் செய்தார்
மாபெருந் தொல்லையெங்கும் மட்டு மிஞ்சி யோங்கிவந்த
ஆகஸ்டு புரட்சியிலே அருந்தலைமை பெற்று நின்றார்
எக்காலுமே சிறையில் இருந்து பெரும் பாடுபட்டு
மக்களுக்கு வேண்டியதை மயக்காது செய்து வந்தார்
மாதா கஸ்தூரிபாயும் மகாதேவதேசாயும்
தேகம் பிரிந்த பின்பும் திகைக்காது சேவைசெய்தார்
மறுபடியும் காங்கிரசு மந்திரிப்பதவி கொண்டு
அரும்பெரும் தொண்டாற்ற ஆனவைகள் காணவைத்தார்
ஹிந்திப் பிரச்சாரசபா இனியவிழாவினுக்கு
சென்னை வந்த காந்திமகான் தென்மதுரை காணவந்தார்
மதுரை மீனாக்ஷியையும் மகிமையுள்ள சொக்கரையும்
தரிசித்துக்கொண்டுமேதான் தண்பழனி வந்து சேர்ந்தார்
பழனி முருகனையும் பணிந்து மனந்துணிந்து
கனிவாக டில்லி சென்று கண்டாரிடைக்கால சர்க்கார்
இடைக்கால சர்க்காரும் இனிதோங்கி நிற்கையிலே
அடக்க முடியா வகுப்பு அல்லல் வந்து சேர்ந்ததினால்
நாட்டைப் பிரிப்பதற்கு நாட்ட மில்லாக் காந்திமகான்
கேட்டை யொழிப்பதற்கு கிருஷ்ப கொண்டு சம்மதித்து
ஹிந்துஸ்தான் பாக்கிஸ்தான் என்று இருபிரிவாய்
அன்று வாங்கித்தந்தனரே அரிய சுதந்திரத்தை.
ஆண்டு இருநூறு ஆண்டவர்கள் சென்றுவிட
வேண்டும் சுதந்திரத்தை வெற்றியொடு பெற்றனரே
எத்தனையோ நம் தலைவர் ஏங்கி எதிர்பார்த்திருந்த
உத்தம சுதந்திரத்தை உகந்து நின்று பெற்றனரே

எண்ணியுழைத்தபடி இந்தியசுதந்திரத்தை
புண்ணியவான் காந்திமகான் பொறுமையொடுகண்டனரே
சுதந்திரம் வந்தபின்பும் தொலையாவகுப்புவாத
இடைஞ்சல் மிகுந்தோங்கினதால் எந்தைமகாத்துமாவும்
நிலைகுலைந்து வாடுகின்ற நிலைமையுள்ள மக்களுக்கு
தலைசிறந்து ஏற்றபல சவுரியங்கள் செய்தனரே
தலைநகராம் டில்லியிலே சச்சரவு முற்றியதால்
நிலைகுலைந்து நிற்பவருக்கு நீதி கூறித்தேற்றிவந்தார்
வகுப்புவெறி முற்றியதால் வகையறியாதுசிலர்
சகிப்புத்தன்மையிழந்து தகாதவைகள் செய்தனரே
நாட்டுவெடிகுண்டொன்றை நமது மகான் காந்திஜிமேல்
போட்டுவொரு வாலிபனும் பொல்லாங்கு செய்தானே
நல்லவேளை குண்டதுவும் நாதன்மகாத்மாமேல்
செல்லாது தவறியதால் தீங்கொன்றுமாகவில்லை
குண்டெறிந்த பாதகனைக்கூடி நின்றோர் தான்பிடிக்க
கண்டறிந்த காந்திமகான் கருணையொடு கூறிடுவார்
என்னுயிரை மாய்ப்பதற்கு எண்ணிய யிவ்வாலிபர்க்கு
இன்னலெதும் செய்யாது இனியவைகள் செய்திடுவீர்
துன்பப்படுத்த வேண்டாம் தொந்திரவு செய்யவேண்டாம்
வன்மமொடு இவர்மேல் வழக்குத் தொடரவேண்டாம்
இன்னல்பலவந்தாலும் இருக்குமுயிர் போனாலும்
என்னால் பிறவுயிர்க்கு இடைஞ்சல் வர யான் பொருக்கேன்
என்று சொல்லிக் குண்டெறிந்த இரக்கமில்லாவாலிபனை
ஒன்றும் செய்யாதவாறு உகந்துகொண்டாடினரே
மன்னுயிரைத்தன்னுயிர்போல் மதித்துவந்த காந்திமகான்
பொன்னுயிர்க்குத்தீங்குசெய்யப் புத்தியும் வந்திடுமோ
இப்படிப் புத்தியுள்ளோர் இருந்துவரும் நாளையிலே
செப்பரிய காட்சியெங்கும் சிறந்தோங்கும் டில்லியிலே

# மகாத்மாவின் மறைவு.

தேசத்தலைநகராய்த் திகழுகின்ற டில்லியிலே
மோசமிகுந்திடவே மூண்டதுவாம் சச்சரவு
இந்துக்கள் முசல்மான்கள் என்ற பிரிவினர்க்குள்
அன்று பெருங்கலகம் அத்துமீறி நின்றனவாம்
பாக்கிஸ்தானிலிருந்து பதறிவந்த அகதிகட்கு
போக்குப்புகலில்லாது புரட்சிமிகுந்தோங்கினதால்
இருவகுப்பு மக்களுமே இடைஞ்சலெதும் செய்யாது
பொறுமையுடன் வாழவென்று போதித்தார்காந்திமகான்
ஓர்தாயின் மக்களாக உதித்த சகோதரர்க்குள்
சீரின்றிச் சண்டை செய்தல் சிறந்ததல்லவென்றுரைத்தார்
இந்திய மாதாவின் இணைசற்ற மக்கள் நாமும்
தொந்தரவில்லாது சுகிக்கவேண்டுமென்றுரைத்தார்
அந்நியநாட்டார் நம்மை அற்பரென்று எண்ணிடாது
கண்ணியமிகுந்திடவே கலந்து வாழவேண்டுமென்றார்
இந்தவிதம் காந்திமகான் இனிய உபதேசம் செய்து
அன்று அகதிகட்கு அரியசேவை செய்துவந்தார்
தினந்தோறும் மக்கள் பலர் சேர்ந்து கூடி வந்திடவே
மனமுவந்து பிரார்த்தனையும் மயங்காது செய்துவந்தார்
ராமபஜனையுடன் நல்லஉபதேசங்களும்
க்ஷேமம்மிகுந்திடவே தினமும் செய்து வந்தனரே
ஹிந்துக்களுக்கின்னலெதும் இழைக்காதிருக்கவென்று
மந்தமுள்ள பாக்கிஸ்தானே மயங்காது எச்சரித்தார்
என்னசெய்தும் மக்களுக்குள் இடைஞ்சல் மிகுந்தோங்கின(தால்
அண்ணலதைச்சீர்படுத்த அரியஉபவாசங்கொண்டார்

உண்ணுவிரமதை உடனடியாய்க்கொண்டுமேதான்
எண்ணம் எதுவுமின்றி இனிய உபதேசம் செய்தார்
கொண்டவிரதமிதைக் கொந்தளிப்புத் தீரும்வரை
என்றும் விடுவதில்லை யென்று உபதேசஞ்செய்தார்
எந்தை மகாத்மாவின் இந்த உண்ணுவிரதம்
எங்குந்தெரிந்திடவே ஏங்கினுரே மக்களெல்லாம்
நாட்டிலுள்ள பல்வகுப்பு நல்லதலைவரெல்லாம்
கேட்டவுடன் டில்லி வந்து கிறுகிறுத்து நின்றனரே
தள்ளா வயதினிலே தயங்காது இவ்விரதம்
கொள்ளுதல்கூடாதென்று கூடிவந்து நின்றனரே
எல்லா வகுப்பினரும் இனிச் சேர்ந்து வாழ்வோமென்று
நல்ல உறுதிமொழி நவின்றனரே காந்திஜிக்கு
முகம்மதியர் டில்லியிலே முற்றும்பயமில்லாது
அமைதியுடன் வாழ்வதற்கு அளித்தனரே வாக்குறுதி
இந்த வாக்குறுதியினுல் எடுத்த விரதமதை
அன்று நிறுத்தினுரே ஆறும் நாள் காந்திஜியும்
மதத்தலைவராக இந்த மண்ணில் அவதரித்தோர்
இதம்பெறவே தம்மதத்திற்கேற்றவைகள் செய்திடுவார்
எந்தை மகாத்துமாவும் எல்லா மதத்தினையும்
ஒன்றுகவே நினைத்து உதவிவந்தார் மக்களுக்கு
உலகமக்கள் யாவரையும் ஒன்றுபோல் நினைந்துவந்த
தலைவர்யாரும் காந்திஜிபோல் தரணியிலுண்டானதில்லை
ஜாதி மத பேதமின்றி சகலரும் கொண்டாடிவந்த
நீதியுள்ள காந்திஜிபோல் நிலவுலகில் கண்டதில்லை
இப்பெரிய மகாத்மாவின் இன்னுயிர்க்குத் தீங்குசெய்ய
அப்பொழுது தூண்டியதே அற்ப மதவெறியும்
மதவெறிபோல்மண்ணுலகில்மற்றும்வெறியில்லையென்
இதந்தெரிய அற்பருக்குள் ஏற்பட்டதே துற்புத்தியும் [னும்

நல்லவர் கெட்டவரென்ற ஞாயமின்றி தீங்குசெய்யும்
பொல்லாமதவெறியும் புகுந்ததுவே அற்பருக்குள்
ஆயிரத்துத்தொளாயிரத்துநாற்பத்து எட்டினிலே
மாயச் ஜனவரியாம் மாதம் தெய்தி முப்பதிலே
வெள்ளிக்கிழமையிலே விளங்கும் மாலை நேரத்திலே
நல்ல பிரார்த்தனைக்கு நடந்துவரும் மார்க்கத்திலே
தடியூன்றிக் காந்திமகான் தண்ணொளிபிரகாசிக்க
அடிமேல் அடிவைத்து அன்புறுக வருகையிலே
அவனிமக்கள் உய்வதற்கு அவதரித்த ஆண்டவனை
சிலுவையிலே அன்றறைந்த சிறியபுத்திகாரரைப்போல்
வீரர்கள் நாங்களென்ற வீணரெல்லாம் மாய்ந்திடவே
பாரதப்போரை முடித்த பகவானை மானென்று
முன்வினைப்பயனுலன்று மூனைந்து பாணமெய்துவிட்டு
தன்நிலைதெரியாமல் தவித்து நின்ற வேடனைப்போல்
அந்நியர்க்குள் ஆண்டு பல அடிமைபட்ட தாய்நாடு
தன்மதிப்புக்கொண்டுயரத் தக்கவைகள் செய்துவிட்டு
எண்ணிலாப்பாடுபட்டு எடுத்த சுதந்திரத்தை
கண்குளிரக்கண்டுவிட்டு கருணைப்பிரவாகங்கொண்டு
மனமார ஆண்டவனின் மாணடியில் சேர்ந்தமர
தினந்தோறும் பிரார்த்தனைகள் செய்து வந்த காந்திஜியை
அடிமைத்தளையவிழ்க்க அவதரித்து வெற்றிபெற்று
கடமையெல்லாம்செய்துதீர்த்துகனிந்துநின்ற காந்திஜியை
முன்வினைப்பயனுலோ மூண்ட மதவெறியாலோ
தந்நிலை தேருது தனித்து வந்து நின்ருெருவன்
கைகூப்பித்தெண்டனிட்டு கருத்தொடுங்க மூன்றுதரம்
மெய்நடுங்க கைநடுங்க மேலும் மேலும் சுட்டானும்
இப்படி சுட்டதிஞல் எந்தை மகாத்மாவும்
ஒப்பரிய ஜோதி தோன்ற உரைத்தனரே ராமாவென்று

மயங்கா மனத்தினராய் மகிழ்ந்த முகத்தினராய்
அயராது சாய்ந்தனரே ஹரிராமா கிருஷ்ணு வென்று
ராம் ராம் என்று சொல்லி நமது மகான் காந்திஜியும்
வீம்பர் உலகை விட்டு விண்ணவர்பால் சென்றனரே
எண்ணியவார் தம்கடமை ஈடேறி விட்டதென்று
புண்ணியவான் காந்திமகான் பொய்யுடம்பை நீத்தனரே
மாயஉலக வாழ்வை மதித்தறிந்துணர்ந்த மகான்
தூயமகிழ்ச்சியுடன் ஜோதியிற் கலந்தனரே
அண்ணல் உயிர் நீத்த அதிர்ச்சியினுவ் மக்கள் சிலர்
எண்ணம் கலங்கிடவே இவ்வுலகை விட்டனராம்
காந்திமகான் மாண்டாரென்ற கலக்கத்தினுல் மக்கள்சிலர்
சாந்தமொடு மெய்மறந்து தங்கள் உயிர்விட்டனராம்
இந்தஉலகினிலே இருக்கும் மக்களெல்லோரும்
சிந்தை கலங்கிடவே திகைத்து வருந்திஞர்கள்
அமெரிக்கா இங்கிலாந்து அரிய ரஷ்யா எங்குமுள்ள
பெருந்தலைவரெல்லோரும் பிரமித்து நின்றனரே
உலகசிரேஷ்டரான உத்தமர் மகாத்மாவை
பிரியக்காலம் வந்ததென்று புலம்பியழுதனரே
இமயமுதல் கன்னிவரை இருக்குமக்கள் யாபேரும்
அமையாது மெய்மறந்து அலறியழுதனரே
மாசில்லா ஜவஹர்லாலும் மற்றுந்தலைவர்களும்
பேசவழிதோன்ருது பிரமித்தழுதார்கள்
உறங்காமல் உண்ணுமல் உலகிலுள்ள மக்களெல்லாம்
கலங்கியழுதனரே காந்திமகான் மாண்டவன்று
மக்களெல்லாம் இவ்வாறு மயங்கி யழுதுகொண்டு
தக்கமகானுடலைத் தகனமது செய்வதற்கு
வேண்டும் அலங்காரமெல்லாம் விளங்கும் புஷ்பரதத்தில்
ஆண்டு தயார்செய்துவைத்த அரியாசனமதிலே

காந்திமகான் நல்லுடலை கண்யமுடனே யமைத்து
சாந்தமிருந்திடவே தரிசனமும் செய்தார்கள்
வெளிநாட்டு மேலோரெல்லாம் விமானங்களிலோடிவந்து
கனிவுகொண்டு மகானுடம்பைக் கண்டு தரிசித்தார்கள்
மாகாணமந்திரிமார் மற்றும்பல பெரியோர்
வாகாய் விமானங்களில் வந்து தரிசித்தார்கள்
எள்ளுவிழஇடமின்றி எங்கும் பெருங்கூட்டம்
கள்ளமில்லா நல்லுடலை காணவந்து கூடியதே
கண்ணீர் பெருகிடவே கதறியழும் மக்கள்குரல்
விண்ணுமண்ணுமதிர விரைந்தெங்கு மோங்கியதே
ஐந்தாறு வரிசையாக அணிவகுத்து ராணுவங்கள்
முந்தி நடந்திடவே முழங்கியதே துக்ககோஷம்
தரைப்படை குதிரைப்படை ததுந்தமரியாதை செய்ய
நடக்கும் ஜனக்கடலில் நகர்ந்ததுவே புஷ்பரதம்
விமானப்படை மேலிருந்து புஷ்பமாரி பெய்திடவே
தவப்புதல்வர் பொய்புடம்பை ஜனங்கள் கொண்டுசென்ற
வல்லபாய்படேல்ஜியும் வாரிசான நேருஜியும் [னரே
நல்ல நம் ராஜாஜியும் நடந்துகூடச்சென்றனரே
ஜனங்கள் அழுகிறதும் தலைவர்கள் ஏங்கிறதும்
விபரமொடு எங்கும் கேட்க விடுத்தனரே ரேடியோவில்
ஐந்துமைல் தூரத்திலே யமுனாநதித்தீரத்திலே
ஹிந்துக்களுக்குகந்த ராஜ்காட்டெனுமிடத்தே
ரதத்தில் வந்த காந்திமகான் நல்லுடம்பை தானெடுத்து
தகனமும் செய்தனரே தக்க மரியாதையொடு
ராமபஜனைகளும் நல்ல வேதகோஷங்களும்
வானைப்பிளந்திடவே தகனமுந்தான் செய்தனரே
கண்ணபிரான் லீலையெல்லாம் கண்ட யமுனாநதியில்
புண்ணியவான் காந்திமகான் பொய்யுடம்புஞ்சேர்ந்ததுவே

தகனஞ்செய்து யமுனையிலே ஜனங்களும் நீராடயிலே
கவனமொடு தேசமெங்கும் கனிந்துமே நீராடினார்கள்
அவரவர்கள் ஊரிலுள்ள ஆறு குளம் சமுத்திரத்தில்
தவராது ஜனங்களெல்லாம் சார்ந்துமே நீராடினார்கள்
காசி ராமேஸ்வரம் கன்னியாகுமரி மற்றும்
மாசில்லாத் தீர்த்தமெல்லாம் மகாத்மா அங்கப்விட்டனரே
அடிமைத்தளையவிழ்க்க அவதரித்த காந்திமகான்
இனிய சரித்திரத்தை எவரும் மறந்திடாரே
பொய்யுடம்புபோனாலும் புகழுடம்பு எக்காலும்
உய்யும் மனிதருக்குள் உலாவி வருமன்றோ
காந்திமகான் மக்களுக்கு காட்டிய நன்மார்க்கமதில்
சாந்தமிகுந்திடவே தாய்நாட்டில் வாழ்ந்திடுவோம்
மதம் ஜாதி பாஷைகளில் மாறுபட்டு நின்றிடாது
இசைந்தொருதாய் மக்களாக இந்நாட்டில் வாழ்ந்திடுவோம்
சேர்ந்து சகோதரராய் தீங்கின்றி வாழுவதே
காந்திமகானுக்கு நாம் காட்டும் மரியாதையாகும்
மாசற்ற காங்கிரசை மதித்து நடப்பதுவே
தேசமக்கள் காந்திஜிக்கு செய்யுமரியாதையாகும்
ஆகையினால் காங்கிரசின் அபிப்பிராயம் போன்றுமக்கள்
சேமமிகுந்திடவே தேசத்தில் வாழ்ந்திடுவோம்
மகாத்மா சரித்திரத்தை மகிழ்ந்து படிப்பவர்க்கு
விபத்துகளில்லாது வேண்டியன வந்து சேரும்
காந்திமகான் சரித்திரத்தை கவனமொடு கேட்பவருக்கு
சாந்தமிகுந்திடவே சவுரியங்கள் வந்து சேரும்
மாந்தருக்குள் தெய்வமான மகாத்மா சரித்திரத்தை
சேர்ந்திருந்து மக்களெல்லாம் தெரியப்படித்திடுவீர்.

---

## வந்தேமாதரம், ஜெய் ஹிந்த்

## வாழ்க சுதந்திரம்.

---

எந்தைமகாத்மாவின் எண்ணரிய நல்லுழைப்பால்
இன்று சுதந்திரமும் இனிது கண்டோம் தாய்நாட்டில்
யுத்தமின்றி சத்தமின்றி உடன்படிக்கையாதுமின்றி
வெற்றிமிக்க சுதந்திரத்தை விரும்பியவார்கண்டு விட்டோம்
பன்னூறு ஆண்டுகளாய் பல்வேறு அந்நியர்க்குள்
துன்ப்பட்ட காலமெல்லாம்துலைந்தரசுகொண்டு விட்டோம்
செல்வத்திலும் கல்வியிலும் சிறந்த தேசசேவையிலும்
பின்னமில்லா நேருஜியை பிரதமராக்கொண்டுவிட்டோம்
தேசத்திற்கு பாடுபட்ட சிறந்த தலைவர்களை
மாகாணமெங்கினுமே மந்திரிமாராக்கிவைத்தோம்
நல்ல நம் மந்திரிமார் நாட்டினுக்கு வேண்டியதை
நன்கு தெரிந்தெடுத்து நடத்தி வருகின்றூர்கள்
ஆண்டுபல நூறுக அவதிப்படுத்திவந்த
தீண்டாமை பேயதனைச் செத்துவிழச்செய்தார்கள்
குடியைக்கெடுத்துவந்த கொடிய மதுவரக்கன்
அடியோடழிந்துவிட அரியசட்டம் செய்தார்கள்
ஏழைபணக்காரர் மற்றும் இடைஞ்சலின்றிமக்களெல்லாம்
வாழவழியானதிட்டம் வகுத்து வருகின்றூர்கள்
காலதேச வர்த்தமானக் கருத்தினுக்கேற்றவாறு
சீலமொடு வேண்டியதைத் தெரிந்தெடுத்துசேவைசெய்வார்
இன்னுஞ்சில ஆண்டினுக்குள் இருக்குங்குறையொழிந்து
நன்மைமிகுந்திடவே நாடு நலம் பெற்றுவிடும்
சுதந்திரசர்க்காரின் தூய வழி கண்டிடாது
இடைஞ்சலென எண்ணிடுதல் ஏற்றதல்ல நன்கறிவீர்

இந்தியர்க்குகாங்கிரசே ஏற்றநல்லஸ்தாபனமாம்
சந்தேகமின்றியதைச் சார்ந்திருந்து வாழ்ந்திடுவோம்
பொருமையினலுண்டாகும் புதியபலகட்சிகளின்
விபரங்களை நன்கறிந்து விரட்டியடித்திடுவோம்
நல்லவரே காங்கிரசென்றும் ஞாயமின்றித்தீங்குசெய்யும்
பொல்லாதாரில்லையென்றும் புத்தியிலே கொண்டிடுவோம்
மகாத்மா உபதேசப்படி மற்றவர் கிடைஞ்சலின்றி
நயம்பெற வாழ்பவரே நாட்டில் காங்கிரஸ்காரராகும்
எப்படியும் காங்கிரசே இந்தியர்க்குரியதென்று
எப்பொழுதுமே நினைந்துஇசைந்துசேவை செய்திடுவோம்
காந்திமகான் அமைத்து வைத்த காங்கிரஸ் செய்யாததுவை
தான்தோன்றி கட்சியெதும் சாதித்ததைக் கண்டதுண்டோ
வந்தேமாதரம் ஜெய்ஹிந்த் வழங்குவதல்லாது வேறு
எந்தவித கோஷங்களும் இந்தியாவிற்கேற்றதல்ல
அசோகன் சக்ரந்துலங்கும் அண்ணைமணிக்கொடியல்லால்
இலங்கும் கொடி எதுவும் இந்தியருக்கேற்றதல்ல
நற்றவப்பயனலே நமது மகான் காந்தியாலே
பெற்ற சுதந்திரத்தை பேணி வளர்த்திடுவோம்
கடவுள் கிருபையாலே காந்திமகான் உழைப்பினலே
அடைந்தசுதந்திரத்தை ஆண்டுபலன் கொண்டிடுவோம்
சுதந்திரம் வாழ்க சுயராஜ்யம் என்றும் வாழ்க
நிரந்தரமாய் நேரு சர்க்கார் நீடுயோங்கி வாழ்க
மந்திரிமார்கள் வாழ்க மற்றுந்தலைவர் வாழ்க
தொண்டர்களும் தியாகிகளும் சுகம்பெற்று நீடு வாழ்க
உழுவோர் உயர்ந்து வாழ்க உழைப்பவர்கள் ஓங்கி வாழ்க
பழுதுவாராதவைகள் பண்ணிடுவோர் என்றும் வாழ்க
தேசபக்தர்கள் வாழ்க சிறந்ததொழிலாளர் வாழ்க
தேசநலங்கருதிச் சிறந்தவைகள் தீட்டிவரும்

தேசத்திலுண்டான சிறந்த கலைகள் வாழ்க
ஆசற்ற பத்திரிகை யாவும் செழித்து வாழ்க
செந்தமிழ் வாழ்க தேசபாஷை ஹிந்தி வாழ்க
வந்தேமாதரம் வாழ்க வழங்கும் ஜெய்ஹிந்த் வாழ்க
காங்கிரஸ் வாழ்க காந்தீயம் எங்கும் வாழ்க
சாந்தமிருந்தோங்கித் தாய்நாடெக்காலும் வாழ்க
காந்திமகான் சரித்திரத்தை கனிந்து படிப்பவரும்
சாந்தமொடு கேட்பவரும் சவுரியங்கள் பெற்று வாழ்க
எல்லோரும் வாழ்க இனியவைகளென்றும் வாழ்க
நல்லோர்கள் ஓங்கிவர நமது நாடு வாழ்க வாழ்க.

மங்களம்; வந்தேமாதரம். ஜெய் ஹிந்த்.





நாவலர் பிரஸ், கோவில்பட்டி—49 காப்பி 1000